## முன்னுரை

ஆரம்பத்தில் இருந்தே அறிவியல் புனைவுகளின் மீது இருந்த அதிக ஆர்வமே அறிவியலின் மீதான என் தேடலையும் அதிகமாக்கியது. படித்த புத்தகங்கள் எல்லாமே இந்த ரகம்தான். முதலில் எழுதும் ஆசை வந்தபோது எதை எழுதுவது என்ற குழப்பம் கொஞ்சமும் இல்லாமல் தொடக்கத்தில் இருந்தே அறிவியல் புனைவுகள் எழுத ஆரம்பித்தேன் இடையிடையே கொஞ்சம் காதல் கலந்த கதைகள், encryption கதைகள் என் தொடர்ந்தாலும் அதிகம் விரும்பியது அறிவியல் கதைகள்தான்.

இந்த தொகுப்பில் நான் இதுவரை எழுதியதில் இருந்து இருபது கதைகளும் ஒரு குறுநாவலும் இருக்கின்றன. சுஜாதா ஒரு கட்டுரையில் சொன்னது போல புதிய கதைகள் படைக்க வாருங்கள், ஆனால் ஒரு விதிதான் நீங்கள் படைக்கும் உலகத்தில் இன்றைய உலகத்தின் அடையாளங்களை முழுவதும் மறைக்க முடியாது/ கூடாது எனபதுதான். இதில் நான் உறுதியாக இருக்கிறேன். புனைவு என்கிற பெயரில் கண்ணைக்கட்டி வேறு உலகத்துக்கு அழைத்துப்போய் அதிகமாக குழப்ப விரும்பியதில்லை. எளிமையான அன்றாட வாழ்வில் நடக்கும் சில விசயங்களில் அறிவியலை கொஞ்சம் வித்தியாசப்படுத்தி பார்த்து எழுதியவை.

இதை எழுத தேர்ந்தெடுத்த கதாபாத்திரங்கள் புத்தி, வைத்தி, புனி போன்றோர்கள். இதில்வரும் புத்தி ஒரு இயற்பியல் விஞ்ஞானி. வைத்தி உயிரியல் துறையை சேர்ந்த மருத்துவர். புனி அவரிடம் வேலை பார்க்கும் ஒரு மாணவி. சொல்ல வரும் சில விசயங்களை இவர்களை வைத்தே கதைகளாக ஆக்கியிருக்கிறேன்.

அனைத்தையும் நீங்கள் ரசிப்பீர்கள் என நம்புகிறேன். நன்றி!

உள்ளடக்கம்

## 1. சில சோதனைகள்

சில வருடங்கள் கழித்து ஊர் திரும்புகிறேன்...படிப்பு முடிந்தது ..இதற்கு மேல் படிக்க வேண்டாம் என்ற முடிவோடுதான் இந்த ஊர் பயணம்....

வீட்டில் வழக்கம்போல நான் பத்து கிலோ எடை கூடி இருந்தாலும் “இளைச்சு போயிட்டியே” என்று சொல்லும் சொந்தங்களின் அன்பில் நனைந்து......என் நண்பர்களை பார்க்க ஊருக்குள் சென்றேன்...

எல்லோரும் ஒரு நல்ல வேலையில் இருந்தார்கள்....கிராமம் என்பதால் மக்களின் பாசத்துக்கு குறைவிருக்காது...எல்லோருக்கும் நல்லா இருக்கேன் என்று பதில் சொல்லி ஒருவழியாக நல விசாரிப்புகள் முடிந்து இருந்தது...

அன்று மாலையில் என் வீட்டிற்கு அருகில் இருக்கும் ஒரு பாட்டி நான் அமர்ந்து இருந்த திண்ணையில் என்னோடு அமர்ந்தார்கள்..சிறுவயதில் அவரிடம் கதை சொல்ல சொல்லி நச்சரித்து..ஒரு நிலையில்..என் அம்மாவிடம் வந்து புகார் செய்யும் அளவுக்கு போய் இருக்கிறது...நல்ல கதைகள் சொல்வார்..

“என்ன படிப்பு எல்லாம் முடிஞ்சுச்சா?”

"ஆமாம் பாட்டி" என்றேன்

"அது என்ன படிப்புப்பா..இப்படி நான்குவருசம் வீட்டிற்கு கூட சரியா வராம இருந்து படிக்கிறது?"

"எப்படி உங்களுக்கு புரியவைப்பேன் பாட்டி" என்றேன்

“சரி விடு எனக்கு என்ன தெரியும் அதை பற்றி” என்றார்கள்

"இந்த இயற்கையில் இருக்கின்ற சில விசயங்ளில் இருந்து மூலத்தை பெற்று அதை எப்படி செயற்கையாக மாற்றி பயனுள்ளதாக உபோயோகிப்பது என்பதை பற்றித்தான்..இதை bio mimicry வகையில் சேர்ப்பார்கள்" என்றேன்.

“அதான் இயற்கையில் இருக்குல்லே பின்ன எதுக்கு செயற்கையாக உருவாக்கணும்?” என்றார்கள்

“காரணம் இருக்கு பாட்டி..இப்போ பாருங்க பறவையை பார்த்துதான் மனிதன் விமானம் படைத்தான் அதில் எவ்வளவு நன்மை” என்றேன்

“அப்ப நீ படிச்சது இதுதானா....இதைத்தான் எங்கள் காலத்தில் பாட்டாக படிச்சாட்டாங்களே அந்த பாட்டை படிக்கவா இவ்வளவு நாள் கஷ்ட்டபட்டே?” என்றார்கள்

“ஆமாம் நீங்கள் சொல்வதும் ஒருவிதத்தில் சரிதான்” என்று மட்டும் அப்போதைக்கு சொல்லி வைத்தேன்

“காட்டில் விவசாய வேலைகள் எப்படி போகுது பாட்டி?” என்றேன்

"எதுவும் சரியில்லை! இப்போது எல்லாம் யாரு விவசாயம் பண்ண விரும்புறாங்க..எல்லாம் டவுன் பக்கம் போகனும்னுதான் ஆசை படுறாங்க...அப்படியே அவங்க செய்ய ஆசைப்பட்டாலும் வேலைக்கு ஆள் கிடைக்க மாட்டிங்குது...அதிக சம்பளம் கேட்குறாங்க..என்னமோப்பா இனி இருக்கிற கொஞ்ச நாள் எப்படியோ நல்லபடியா போயிருச்சுன்னா..நான் நிம்மதியாக போவேன்" என்று சொன்ன பாட்டியின் குரலில் சோகம் இருந்தது.

"விடுங்க பாட்டி எல்லாம் ஒரு நாள் சரியாகிவிடும்" என்றேன்

"இது சரியாகாதுப்பா..உங்களை போன்ற படிச்சவங்க ஏதாவது புதுசா செஞ்சாத்தான் உண்டு இல்லேன்னா இதுக்கும் கீழேதான் போகும்...சரி நீதான் ஏதோ படிச்சு இருக்கியே..இந்த பாட்டிக்காக ஏதாவது செய்யகூடதுப்பா... களை எடுக்க ஆள் கிடைக்க மாட்டிங்குது..எப்படித்தான் விவசாயம் பார்க்கவோ தெரியலை" என்றார்கள்

"நான் இதுக்கு என்ன செய்ய முடியும் பாட்டி?" என்றேன்

"நீதான் சொன்னியே இயற்கையில் உள்ளதை அப்படியே செயற்கையாக நனமைக்காக உபோயோகிப்போம்னு..அதே மாதிரி இந்த ஆடு எப்படி புல்லை திங்குதோ அதே மாதிரி அது காட்டில் இருக்கும் களையை மட்டும் தின்கிற மாதிரி எதையாவது கண்டுபிடிச்சா..களைவெட்டும் வேலை மிஞ்சும்" என்றார்

"இதை நீங்கள் எளிதாக சொல்லிவிட்டிர்கள் ஆனால் செய்வது கஷ்டம." என்றேன்

"சரி நான் கிளம்புறேன் வேலை இருக்கு" என்று சொல்லி கிளம்பினார்கள்.

* * * * *

அன்றைய இரவில் பாட்டி சொன்ன விசயம் மனதில் ஓடியது..என்ன படித்து என்ன செய்ய இந்த மாதிரி மனிதர்களுக்கு உதவவில்லை என்றால் சரியா?..,,ஏன் பாட்டி சொன்னது போல களை மட்டும் தின்னும் ஆட்டை செயற்கையாக...உருவாக்க முடியாதா?

மறுநாள் என் நண்பர்களிடம் இது பற்றி விவாதித்தபோது..அவர்கள் முதலில் கொஞ்சம் சிரித்து விலகினாலும்...நான் கொஞ்சம் வற்புறுத்த இதில் கவனம் செலுத்தினார்கள்...முதலில் எங்களின் விவாதம் இது முறையாக சாத்தியமா என்பதுதான்...

சாத்தியம் என்று முடிவானது.....அதாவது செயற்கையாக இயங்கும் ஆட்டை உருவாக்கி அதன் முகப்பகுதியில் எந்த வகையான களைகளை அகற்றவேண்டுமோ..அதன் வாசனைக்கு ஏற்ப சில நுகரும் சென்சார்களை பொறுத்தி, அதில் இருந்து பெறப்படும் தகவலை ஒரு PLC (PROGRAMMABLE LOGIC CONTROLLER)-ல் கொடுத்து அதன் அடிப்படையில் மற்றவற்றை இயக்குவது...

அதன் வெளிப்புற உடல் அமைப்பை சில சட்டங்கள் மூலம் அமைப்பது முடிவானது எந்த அளவில் இருக்க வேண்டும் என்பதற்காக ஒரு ஆட்டினை அளக்கவேண்டியது இருந்தது..ஆட்டில் முக்கியமாக கால்களுக்கு இடையே உள்ள தூரம்,அதன் உடலின் அமைப்பு போன்றவற்றை அளந்தோம்.

அடுத்து இந்த PLC யை எப்படி செயல்பட வைப்பது??...நுகரும் சென்சார் அதற்குரிய வாசனையை உணர்ந்தவுடன் அது தனது தகவலை PLC க்கு அனுப்பும், அதற்கு ஏற்றாற்போல அதன் தலை, கால்கள் எப்படி நகர வேண்டும் என்பதை அந்த PLC, அதன் RELAY க்களின் உதவியுடன் அதற்குரிய மோட்டார்களை இயக்கும்...

மொத்தம் ஆறு மோட்டர்கள்.....நான்கு அதன் கால்களுக்கு,ஒன்று கழுத்துக்கு, வாயின் அசைவிற்கு ஒன்று.இந்த மோட்டார்கள் எல்லாம் ஒரு பிரதான PLC தரும் கட்டளையின் கீழ் இயங்கும்...இந்த PLC க்கு பிரதான தகவல்களை கொடுப்பது நுகரும் சென்சார்கள்...தேவையான மின்சாரம் அதன் வயிற்றில் பொருத்தபட்டிருக்கும் பாட்ட்ரியில் இருந்து கிடைக்கும்...அதன் வயிற்றின் வெளிப்புறங்களில் சூரிய ஒளியில இருந்து மின்சாரம் எடுக்க உதவும் சிலேடுகள் பொறுத்தி அதில் இருந்து அந்த பாட்ரி இயங்குமாறு இருந்தது...

வேலை தொடங்கியது....நாங்கள் தயாரித்த வரைபடங்களை கொண்டு அருகில் இருந்த சில சிறு தொழிற்சாலைகளின் உதவியில் தேவையானவற்றை உருவாக்கினோம்.

முதலில் சென்சார் எதுவும் பொருத்தாமல்.வெறும் ஆட்டை மட்டும் நடக்கின்றதா என்று சோதித்தோம்..இரண்டு அடி சென்ற குப்புற விழுந்தது..என்னவென்று பார்த்ததில் அதனால் புவிஈர்ப்பு விசையை சரியாக சமாளிக்க முடியவில்லை...காரணம் அதன் கால்கள் அதன் உடலில் இருந்து செங்குத்தாக இருந்ததே ...அதை கொஞ்சம் மாற்றி அதன் உடலில் இருந்து 5 டிகிரி கோணத்தில் அமைத்து பார்த்ததில்..அந்த பிரச்சினை சரியானது...இது கிட்டத்தட்ட புதியதாக பிறந்த ஆட்டு குட்டி நடக்கும் முறை..ஆட்டு குட்டிகள் முதலில் நடைபழக கால்களை அகலமாக வைத்து கொள்ளும்..அதையே செய்தோம்...

ஒருவழியாக நேராக நடந்தது...அடுத்து அதை கட்டுபாட்டில் கொண்டு வர வேண்டும்..நுகரும் சென்சார்களை அதன் மூக்கு இருக்கும் இடத்தில் பொறுத்தி அதன் இணைப்புகளை அதன் வயிற்று பகுதியில் இருக்கும் PLC யோடு இணைத்து அதில் இருந்து பெறும் தகவல்களை RELAY வுக்கு கொடுத்து அதன் கட்டளையில் மோட்டர்கள் இயங்குமாறு செய்தோம்.

ஒரு சில தாவரங்களின் வாசனையை நுகரும் விதத்தில் அந்த சென்சார் இருந்தது,குறிப்பிட்ட வாசனை வந்தவுடன் அந்த தகவல் PLC க்கு போகும் அது உடனே கட்டளை இட்டு அதன் கால்களை இயங்க செய்து அந்த செடிக்கு அருகில் செல்ல செய்யும், அருகில் சென்றவுடன் அடுத்த கட்டளையின் பெயரில் அதன் வாய் திறந்து அந்த களை செடியை பிடுங்கி வயிற்றுக்குள் செலுத்தும்...வயிற்றுக்குள் அந்த களைகளை சேமித்து வைப்பதற்கு பதில் அதை சிறு சிறு துண்டுகளாக வெட்டி வேளியேற்றுமாறு அமைத்தோம்..

ஒருவழியாக சோதனை செய்ய ....சில செடிகளை தரையில் அங்கும் இங்கும் பரப்பி..ஆட்டை நடக்க செய்தோம்..கொஞ்ச தூரம் நடந்து நுகர்ந்ததும் சரியாக அதனை உள்ளே இழுத்தது.........அப்படியே தொடர்ந்து நாங்கள் போட்ட எல்லா செடிகளையும் தீர்த்தது...

இதில் ஒரு பிரச்சினை..பெரிய நிலத்தில் இதை கட்டுபடுத்துவது என்பதுதான்.....இதற்காக அந்த சென்சாரின் நுகரும் தூரம், அதன் ஒரு எட்டுக்கு நகரும் தூரம் மற்றும் நிலத்தின் மொத்த நீள, அகலம் இவற்றை இணைக்க வேண்டியது இருந்தது..

அதாவது நிலத்தின் நீள, அகல அளவுகளை கொடுத்தால், அதைவைத்து தானாகவே சென்சாரின் நீளவாக்கில், பக்கவாட்டில் நுகரும் தூரம், அது ஒரு எட்டில் நடந்து கடக்கும்

தூரம் இவற்றை கணக்கிட்டு எவ்வளவுதூரம் பயணிக்க வேண்டும்..எங்கு திரும்ப வேண்டும்..எங்கு முடிக்க வேண்டும் என்பதை தீர்மானிக்கும்....அதாவது அதன் காலடிகளின் எண்ணிக்கையை கட்டுப்படுத்தி அந்த நிலத்தில் எத்தனை “சால்” செல்ல வேண்டும் அவ்வளவே...இதையும் சோதித்து பார்த்தோம்..சரியாக திரும்பியது..நின்றது..

ஒருவழியாக அந்த பாட்டியின் நிலத்தில் சோதித்தோம்...சரியாக இருந்தது....”அப்ப இது எல்லா களைகளையும் எடுக்கதா? என்று பாட்டி குறைபட்டு கொண்டார்கள்...இல்லை பாட்டி அதுக்கு நிறைய சென்சார்கள் பொறுத்தவேண்டியது இருக்கும் என்று சொல்லி சமாளித்தேன்..

* * * * *

ஊருக்குள் எங்களின் ஆடு பிரபலம் ஆனது...முதல் சோதனையின் முடிவில் அதன் கால் இணைப்புகளில் சத்தம்வர ஆரம்பித்ததால்..அதற்கு எண்ணை அல்லது கிரீஸ் தடவப்பட்டது..

மறுநாள் சிலரின் ஆசைக்கு இணங்க பகல் முழுவதும் களை எடுப்பில் இருந்தது..

மாலையில் ஒருவரின் நிலத்தில் களை எடுத்து கொண்டு இருக்க....என் நண்பர்களுடன் சேர்ந்து அதை எப்படி மேம்படுத்தலாம் என்பதை பற்றி பேசிக்கொண்டே...கொஞ்ச தூரம் நடந்தோம்...இப்போது அந்த ஆடு மட்டுமே தனியாக தனது வேலையை செய்து கொண்டு இருந்தது.....

சில மாற்றங்கள் செய்யலாம் என முடிவெடுத்து,அந்த இடத்திற்கு திரும்பி வந்து பார்த்த எங்களுக்கு அதிர்ச்சி... அது களையை மட்டும் திண்ணாமல் அங்கு இருந்த பயிர்களையும் தின்று கொண்டு இருந்தது....நண்பன் ஒருவன் ஓடி போய் அதை அணைத்தான்...

மறுநாள் காலையில் எங்கள் வீட்டின் முன் கூட்டம் கூடி இருந்தது..

உங்கள் மகன் படித்ததை சோதித்து பார்க்க எங்களின் நிலம்தான் கிடைச்சுதா? என்ற வார்த்தைகளோடு அந்த நிலத்துக்காரர் சண்டைக்கு வந்து இருந்தார்...

“நானா உங்கள் நிலத்தில் இந்த ஆட்டை வைத்து களை எடுங்கள் என்று சொன்னேன்..நீங்கள் தான் வேண்டும் என்று என்னிடம் சொன்னீர்கள் இப்பொது ஒரு சிறு தவறு நிகழ்ந்து விட்டது அவ்வளவுதான்”என்றேன்

“எது சிறு தவறு..நிலத்தில் உள்ள பாதி பயிர்களை வெட்டி போட்டு இருக்கு இது எப்படி சிறு தவறு” என்று அவர் சண்டையை தொடர்ந்தார்...

அந்த சென்சார்கள் தாவரங்களின் உணவு தயாரித்தலின் போது வெளிப்படும் oxygen யை ஆதாரமாக கொண்டு நுகரும் வகையில் வடிவமைக்கப்பட்டு இருந்திருக்கிறது...தாவரங்கள் பொதுவாக சூரிய ஒளியில மட்டுமே carbon dioxide மற்றும் நீரை வைத்து உணவு தயாரித்து மீதம் இருக்கும் oxygen யை வெளியேற்றும்...ஆனால் இரவில் அது உணவு தயாரிக்க முடியாது என்பதால் அதற்கு தேவையான oxygen யை வெளி காற்றில் இருந்து எடுக்கும்..இந்த நேரத்தில் அதில் இருந்து oxygen வெளியில் வராது... இதனால் அந்த சென்சார்களில் கொஞ்சம் பிரச்சினை ஏற்பட.. தொடர்ந்து தகவலை அனுப்பி எல்லாம் வெட்டுபட்டது.....

அவர்களுக்கு எப்படி புரிய வைப்பேன் இதுதான் என் ஆடு செய்த தவறுக்கு காரணம் என்று.. அந்த ஆள் இன்னும் சண்டையை தொடர்ந்து கொண்டுதான் இருந்தார் அந்த ஆடு அமைதியாக நிறுத்திவைக்கப்பட்டு இருந்தது.. என்ன நடக்கின்றது என்று தெரியாமல்...

-----------x-----------x-----------x-----------

## 2. எல்லாம் நேரம்

மீண்டும் அவளது நினைவு......எப்போதெல்லாம் அவளது நினைவு வருகின்றதோ கொஞ்சம் மனது வலிக்கும்...

குழந்தை வெளியில் விளையாட போய் இருந்தாள்...மனைவி நான் அமர்ந்துஇருந்த இடத்தை நோக்கி வரும்போது அன்றைய நாள்காட்டியில் முந்தைய நாளை கிழித்தாள் இன்றைய தேதியாக 10.12.2028 என்று காட்டியது...அந்த காகிதத்தைக் கையில் வைத்து கொண்டு என்னருகில் வந்தவள்..

"என்ன சோகமாய் இருக்கிற மாதிரி இருக்கு?" என்றாள்

திருமணம் ஆகி ஆறு வருடங்கள் ஆகியும் அடிக்கடி வந்து வலி தரும் அவளின் நினைவுகளை பற்றி மனைவியிடம் இதுவரை சொல்லவில்லை...

அவளின் கேள்விக்கு இப்போதும் உண்மையான பதிலை சொல்ல மனம் இல்லை...இருந்தாலும் இவ்வளவு காலம் அவளை ஒருவிதத்தில் ஏமாற்றி இருக்கிறேன்..இனிமேலும் அது தொடர வேண்டுமா என்று நினைக்கும்போது..அந்த விசயத்தை சொல்லலாம் என நினைத்தேன்...

"இங்கு வா உன்னிடம் கொஞ்சம் பேச வேண்டும்" என்று அழைக்க அருகில் உட்கார்ந்தாள்

"என்ன சொல்ல போறீங்க?."

"திருமணத்திற்கு முன் நான் ஒரு பெண்ணை காதலித்தேன்"

இதை நான் சொல்லி முடித்ததும் அவளின் மனநிலை முற்றிலும் மாறியது...எல்லா பெண்களுக்கு இருக்கும் அதே உணர்வு....

"அப்படியா அந்த காதல் என்ன ஆச்சு? எதுக்கு என்னை திருமணம் செய்தீர்கள்" என்றாள் இயல்பாய் ...உணர்வை மறைத்து..

"காதல் தோல்வி ஒன்றும் இல்லை.....எங்கள் காதல் பிரிந்தது எல்லாம் காலத்தின் கொடுமை...காலம் ரெம்ப வலிமையானது..."என்றேன்

"அப்படி எப்படி காலம் உங்களின் காதலை பிரித்தது"என்றாள்

"நாங்களும் மற்ற காதலர்களை போலத்தான்...காதலை தொடங்கினோம்....தேவையில்லாத சந்திப்புகள்,பேச்சுக்கள்..பல வண்ண வண்ணத்து பூச்சிகளை மனதில் பறக்க விட்டோம்....வயிற்றுக்கும் தொண்டைக்கும் இடையே ஒரு உருண்டை எல்லாம் சரியாக உருண்டது....ஒரு நேரத்தில் எங்களின் வீட்டில் காதலை சொல்லி திருமணத்திற்கு சம்மதம் கேட்காலம் என்று நினைக்கும்போது...

"எப்படியும் வீட்டில் ஜாதகம் பார்ப்பார்கள் எனவே முதலில் நாமே ஜாதகம் பார்ப்போம்,சரியாக பொருந்தி இருந்தால் வீட்டில் சொல்லி திருமணத்திற்கு சம்மதம் கேட்போம்,இல்லை என்றால்...சம்மதம் இல்லாத திருமணம்" என்றாள் அவள்

அவளின் கருத்தும் சரி என பட்டதால் ஜாதகம் பார்த்தோம் இருவரின் பொருத்தமும்

சரியாக இருந்தது ஆனால் ஒரு பிரச்சினை...அவளின் வயது என் வயதைவிட ஒரு வருடம் அதிகம்..இதற்கு வீட்டில் எப்படியும் எதிர்ப்பு தெரிவிப்பார்கள்..இருவரும் என்ன செய்யலாம் என்று யோசித்தோம்...

சம்மதம் இல்லாத திருமணத்தில் பிரச்சினைகள் அதிகம்..முடிந்தவரை உறவினர் சம்மதத்தோடு திருமணம் செய்வது நலம்..என்ற என் கருத்தை அவளிடம் சொன்னேன்...

“அதற்கு அவள் என்ன சொன்னாள்?” என்றாள் மனைவி ஆர்வமாக.....

இதற்கு தீர்வாக, அவள் பணிபுரியும் இடத்தில் இருந்து ஆய்வுக்காக விண்வெளிப்பயணம் செல்ல இருப்பதாகவும் அதில் தானும் பங்கு எடுத்துக்கொண்டால் அவளின் வயது என் வயதை விட குறைய வாய்ப்பு இருப்பதாக சொன்னாள்.




“இது எப்படி சாத்தியம்?”என்றாள் மனைவி

"இதைத்தான் நானும் அவளிடம் கேட்டேன், சிறப்பு சார்பியல் தத்துவத்தின் (special relativity theory) படி, இரண்டு வெவேறு இரு நிலைகள் இருப்பதாக வைத்துகொள், அதில் ஒன்று நிலையாகவும் மற்றொன்று வேகமாக நகர்வதாக கொண்டால்......இந்த இரண்டு நிலைகளிலும் ஒருவர் கடிகாரத்துடன் இருந்து காலத்தை கணக்கிட்டால், நிலையாக இருப்பவரின் கடிகாரம் நகரும் அளவைவிட நகரும் நிலையில் உள்ளவரின் கடிகாரம் மெதுவாக நகரும்...இதை time dilation என்று சொல்வார்கள்" என்றேன்

"இது என்னங்க புதுக்கதையா இருக்கு?"என்றாள்

"இல்லை இது ரொம்ப பழைய கதைதான் பல்வேறு ஆராய்ச்சிகள் செய்து உண்மை என்று நிரூபித்து இருக்கிறார்கள்..இதைப்பற்றி அப்புறம் தெளிவாக சொல்கிறேன்." என்றேன்

"இதை பற்றி எனக்கு தேவை இல்லை.. அவள் அடுத்து என்ன ஆனாள் என்பதை சொல்லுங்கள் முதலில்" என்றாள்

"இந்த முறையில் அவள் பயணித்தால் அவளின் காலம் பூமியில் இருப்பவர்களோடு ஒப்பிட்டால் குறையும்...அதாவது காலம் குறைந்தால் வயதும் குறைந்தமாதிரிதானே...அதான் அந்த பயணம் செய்யபோவதாக சொன்னாள். நானும் சிறு தயக்கத்திற்கு பின்..எப்படியும் எங்களின் காதல் வெற்றிபெற வேண்டும் என்பதற்காக சரி என்றேன்".

"சரி அவள் அந்த பயணம் போனாளா?" என்றாள்

"ஆமாம் போனாள்.... ஆனால் திரும்பி இன்றுவரை வரவே இல்லை..என்ன ஆச்சு என்றும் தெரியவில்லை."

"ஏன் ஏதும் விபத்து ஆகிவிட்டதா?"

"இல்லை அதுபற்றி ஒரு தகவலும் இல்லை...இந்த நேரத்தில் தான் என் வீட்டில் திருமணத்திற்கு கட்டாய படுத்தினார்கள்..நான் திருமணம் வேண்டாம் என்று சொல்ல இந்த காரணத்தை சொன்னால் நம்ப மாட்டார்கள் ....அதான் உன்னை திருமணம் செய்ய சம்மதித்து விட்டேன்"

"இப்போது வருத்தப்படுவதற்கு காரணம் அவள் திரும்பி வந்துவிடுவாளோ என்ற பயமா? இல்லை உண்மையாக காதலித்து அவளை பிரிந்த சோகமா?" என்றாள் மனைவி

"எங்களின் காதலுக்காக ஏதோ ஒன்று செய்ய போய் அவள் என்ன ஆனாள் என்று தெரியாத போது நான் மட்டும் இங்கு குடும்பத்தோடு சந்தோசமாக இருக்கிறேன்..இத்தனைக்கும் அவளை உண்மையாக காதலித்தும் இருக்கிறேன்....அதான் அவள் நினைவு வரும்போது கொஞ்சம் மனது வலிக்கின்றது." என்றேன்

என் மனைவிக்கு என்ன சொல்வதென்று தெரியாமல் கையில் இருந்த அந்த நாள்காட்டி காகிதத்தை கோபமாக கசக்கி கொண்டு இருந்தாள்.

விளையாட சென்ற என் குழந்தை சந்தோசமாக ஒருவரை வழிகாட்டி அழைத்து வந்து கொண்டு இருந்தாள்...

"அப்பா இவங்க உங்களை தேடி வந்து இருக்காங்க...இவங்க பேர்கூட என் பெயர்தான்...ரொம்ப அழகா இருக்காங்க...." என்றாள் என் மகள் அவளின் கையை பிடித்தபடியே.......

அவளின் முகத்தை பார்த்த அந்த நொடியில் எழுந்து நின்றேன்...நான் சில வருடங்களுக்கு முன்னால் பார்த்து பார்த்து காதலித்த முகம்......என்னோடு ஒப்பிட்டால் கொஞ்சம் மாறியிருந்தாள்...அவளுக்கு எல்லாம் புரிந்து இருந்தது...எனக்கு திருமணம் ஆகி குழந்தை இருப்பது அந்த குழந்தைக்கு அவள் பெயரை வைத்து இருப்பது.....

வாசலில் நின்று இருந்தாள்...அடுத்து என்ன செய்வது என்று அறியாமல்...எப்போதும் எனக்கு அவளின் அழகான கண்களை பார்த்தால்....வயிற்றுக்கும் தொண்டைக்கும் இடையே உருளும் ஒரு உருண்டை....இப்போது என் அடிவயிற்றில் மட்டும் வேகமாக உருண்டது.

-----------x-----------x-----------x-----------

### 3. நம்பிக்“கை”

வைத்தியின் அண்மைய சாதனை என்றால் ஸ்டெம் செல்களை வைத்து ஒரு உறுப்பை உடலிலேயே வளரச் செய்வதுதான்..ஏற்கனவே இதே ஸ்டெம் செல்களை வைத்து செல் குறைபாடுகளை ஜீன்தெரபி மூலம் சரி செய்து கொண்டு இருந்தார்கள்..... ஸ்டெம் செல்களை தேவையான திசுக்களாக அல்லது உறுப்புகளாக மட்டுமே தனியாக வளரவைத்து பின் அதை பாதிப்படைந்தோரின் உடலில் பொருத்தி அந்த குறையை சரி செய்தனர்...

இந்த முறையில் ஒரு முன்னேற்றமாக வைத்தியின் முறை இருந்தது...அது..ஸ்டெம் செல்களை தனியாக வெளியே வளர வைக்காமல் நேரடியாக அதை உடம்பிலேயே வளர வைப்பது அதாவது ஒருவருக்கு இன்னொரு காது வேண்டும் என்றால் அதுக்கு தேவையான ஸ்டெம் செல்களை பிரித்து எடுத்து அதில் உள்ள ஜீன்களைசெயற்கையான கட்டுப்பாட்டில் வைத்து அதான் மூலம் உருவாக்கும் ப்ரோடின்களைசரியான வகையில் கட்டுபடுத்தி ஒரு புதிய காதை உருவாக்கிவிடுவார்...இதற்கு அந்த ஆள் அவரது ஆய்வுகூடத்தில் சில மணிநேரங்கள இருந்தால் போதுமானது... அவருக்கு உடம்பில் எந்த இடத்தில காது வேண்டுமோ அங்கு கிடைக்கும்...

வைத்தி இதை சில எலிகளின் மீது மட்டும்தான் செய்து பார்த்து இருந்தார்...என்னதான் வைத்தி பெரிய ஆளாக இருந்தாலும்.இந்த ஆராய்ச்சிகளை மருத்துவமனைகளில் செய்ய முடியவில்லை..சட்டப் பிரச்சினை ஒருபுறம்இருந்தாலும்..சில மதவாத சக்திகள் இந்த முயற்சியை விரும்பவில்லை..எனவே யாருக்கும் தெரியாமல் அவரது ஆய்வுக் கூடத்தில் இதனை செய்தார்.

மொத்தம் மூன்றுபேர் வைத்தியோடு சேர்த்து.... ஒருவள் புனி..கல்லூரி முடித்து விட்டு ஆய்வுசெய்யும் மாணவியாக சேர்ந்தாள்..இப்போது வைத்தியின் கண்டுபிடிப்பில் பாதி அறிந்தவள்..மற்றொருவள் பணியாள்.. சிறு சிறு மருத்துவ வேலைகள் செய்வாள்...

புனியை வைத்தி தனது சொந்த மகள் போலத்தான் வைத்து இருந்தார்..ஆனால் புனிக்கு விளையாட்டுத்தனம் அதிகம்.....முதலில் அவளுக்கு எதையும் கற்றுகொள்ள ஆர்வம இல்லையென்றாலும் வைத்தியின் இந்த ஸ்டெம்செல் ஆராய்ச்சி புனிக்கு கொஞ்சம் புதுமையாக ஆர்வமாக இருந்தது..சந்தேகங்களை கேட்டு ஒருவழியாக அவளும் இதை கொஞ்சம் படித்து இருந்தாள்...

இந்த முறையை ஒரு மனிதன் மீது செய்து பார்க்கவேண்டும் என்பதே அவரின் இப்போதைய விருப்பம்...அதை புனியிடம் சொன்னபோது..

"அதில் ஏதும் பிரச்சினை ஏற்பட்டால் என்ன ஆகும் என்பதையும் நினைத்து பார்க்கவேண்டும்" என்றாள்

"ஆமாம் பெரிய பிரச்சினை...இதை யாருக்கும் தெரியாமல் செய்யவேண்டும்முடிந்த வரை நமது ஆராய்ச்சியை பற்றி தெரியாதவராக இருந்தால் நல்லது... பேசி சம்மதிக்க வைக்கலாம்" என்றார்

"அதைவிட யாருக்கு ஒரு குறை இருக்கோ அவரிடம் உங்க குறையை நீக்குகிறோம் என்று சொல்லி இதை செய்ய முயற்சிக்காலமே" என்றாள்

"ஆமாம் இதுவும் நல்ல யோசனைதான்... அந்த ஆளும் தானாக முன்வந்துஒத்துகொள்ள வாய்ப்பு இருக்கின்றது உடனடியாக இதுக்கு தேவையான ஆளை தேட வேண்டும்" என்றார்

அன்று மாலையில் எல்லோரும் கிளம்பும் முன் அந்த பணியாளிடம் ஏதாவது உடல் குறை இருப்பவர் உங்களுக்கு தெரிந்தவர் என்றால் அழைத்து வருமாறும் அந்தகுறையை சரி செய்யலாம் என்று சொன்னார்..அவளும் சரி என்றாள்.

இரண்டு நாள்கள் கழித்து அந்த பணியாள் பெண் தனக்கு ஒருவனை தெரியும் அவன் சிறுவயதில் வலது கை பாதியை இழந்தவன்..இப்போது வீட்டில் சும்மாதான் இருக்கிறான்..நீங்கள் சம்மதித்தால் நாளைக்கு அவனை அழைத்து வருகிறேன் என்று சொல்ல வைத்தியும் சம்மதித்தார்...

* * * * *

அவன் வந்தான்...ஒல்லியாக இருந்தான்..புனியை கண் கொட்டாமல் பார்த்தான்...அவனது உடல் நிலையில் சில பொதுவான சோதனைகள் செய்யபட்ட பின்னர்...வைத்தி அவனிடம்

"நீங்கள் இழந்த கையை திருப்பி வளர வைக்க முடியும் நீங்கள் சம்மதித்தால்"

"அது எப்படி அதான் முடிஞ்சு போச்சே...இது என்ன மரமா? கிளை ஓடிந்தவுடன் அந்த இடத்தில இருந்து தானாக ஒரு புது கிளை தளிர்த்து வர." என்றான் சிரித்து கொண்டே..

"ஆமாம் நமதும் உடம்பிலும் அது சாத்தியம்தான்...அந்த மாதிரி தளிர்த்து வரும் அதிசயத்தைத்தான் நான் இப்போது உனக்கு செய்ய போகிறோம்" என்றார்

"எப்படி மந்திரம் சொல்லியா? இல்லை ஏதாவது பூஜை செய்தா?"

"இல்லை இது அறிவியல்.... மந்திரம் இல்லை தந்திரம் இல்லை..முழுவதும் நம்பலாம்"என்றார்

"சரி என்னை என்ன செய்வீர்கள் ..எனக்கு ஏதாவது ஒன்று ஆனால்?"கேட்டான்

"ஒன்றும் ஆகாது..ஏற்கனவே சோதித்து இருக்கிறோம்...என்ன ஒருவேளை கைவளராமல் போகுமே தவிர மற்றபடி ஒரு தீங்கும் இருக்காது...இது உண்மை நம்பலாம்"என்றார்

அருகில் இருந்த புனி..."ஒரு தடவை முயற்சி செய்து பாருங்களேன் கை கிடைத்தால் உங்களுக்குத்தானே நல்லது" என்று சொல்ல அவளை உற்று பார்த்தான்

"சரி சம்மதிக்கிறேன் எனக்கு எதுவும் ஆககூடாது" என்றான்

அடுத்த வந்த நாள்களில் வைத்தியும் புனியும் நிறைய உழைத்தார்கள்..செல்களின் வளர்ச்சி விகிதம்..அதுக்கு தேவையான புரோட்டீன்கள்...அதை கொடுக்கும் ஜீன்கள்..அதை எப்படி தகுந்த நேரத்தில் கட்டுப்படுத்துவது போன்ற விசயங்களை சேகரித்தார்கள்..

அன்று மாலை அவனை ஒருமுறை சோதித்து பார்த்துவிட்டு...எல்லாம் தயாராய் இருந்த அந்த அறைக்குள் கொண்டு போனார்கள்.. வெப்பநிலை முழுவதும் சரியாக கட்டுப்படுத்தபட்டு இருந்தது...ஒரு சிறிய நீண்ட கண்ணாடி குடுவை அவனது கையில் பொருத்தப்பட்டது..அதன் மேல் சில துவாரங்கள்..இருந்தன...சில வயர்கள் அருகில் இருந்த கணினியில்

இணைக்கப்பட்டு இருக்க...அவன் மிரண்டு போய் இருந்தான்...

வைத்தி அந்த கண்ணாடி குடுவையில் இருந்த துவாரத்தில் ஒரு ஊசியை அவனது கையில் ஒடிந்து இருந்த முனையில் அதை செலுத்தினார்...அருகில் இருந்தபுனி சரியாக எப்போது செலுத்த பட்டது என்ற நேரத்தை குறித்து கொண்டாள்...

முழுவதும் அந்த செல்கள் வளர்ச்சி அடைய ஆகும் நேரத்தை முன்னரே அவர்கள்கணித்து இருந்தார்கள்..போதுமான வளர்ச்சி அடைந்த பிறகு அந்த செல்களின்வளர்ச்சியை நிறுத்த ஒரு ஊசி போடவேண்டும்...அதாவது அந்த செல்கள் பல்கிபெருகாது...இவர்களின் கணக்குப்படி அதிகாலையில் ஐந்து மணிக்கு அந்த ஊசிபோட்டு செல்லின் வளர்ச்சியை நிறுத்த வேண்டும...

அவனை முழுவதும் மயக்கபடுத்தி இருந்தார்கள்..சிறிது நேரம் தொடக்க நிலை செல்கள் பல்கி பெறுகி வளர்ச்சி அடைவதை உறுதி செய்துவிட்டு வைத்தியும்புனியும் ஒரு அறைக்கு செல்ல..அந்த பணியாள் அங்கு இருந்தாள்...

வைத்திக்கு தூக்கம் வரவில்லை..அவ்வப்வோது போய் பார்த்துவிட்டு வந்தார்.....

"இதுமட்டும் நிறைவேறி விட்டால் என் வாழ்கையின் லட்சியம் நிறைவேறின மாதிரி" என்றார்

"இதில் என்ன சந்தேகம் கண்டிப்பாக நிறைவேறும்" ..

"பார்ப்போம் இன்னும் சில மணி நேரம் இருக்கு"என்றார்

அந்த ஊசியை போடவில்லை என்றால என்ன ஆகும்? கேட்டாள்

"அவன் கையின் வளர்ச்சி நிற்காமல் தொடர்ந்துகொண்டே இருக்கும் அவ்வளவுதான்" என்றார்

கொஞ்ச நேரத்தில் புனி அப்படியே சாய்ந்து தூங்கியே விட்டாள்..வைத்தி அந்த ஐந்து மணிக்காக காத்து இருந்தார்...

* * * * *

ஐந்து மணிக்கு முன்னரே புனியை எழுப்பி..அந்த மருந்தை எடுத்துக் கொள்ளச் சொல்லி இருவரும் கிளம்பி அந்த அறையை நோக்கி சென்றார்கள்..அங்கே..அவன் இல்லை..ஒரு ஓரத்தில் அந்த பணியாள் விழுந்துகிடந்தாள்...

அவசரமாக அவளை மயக்கத்தில் இருந்து எழுப்பி.

“அவன் எங்கே?”

"என்னை தாக்கிவிட்டு போய்ட்டானே”

"அதான் ஏன்?" என்றார் கோபமாய்

"அவனுக்கு முழு கையும் நல்லா வளர்ந்து இருந்தது...எழுந்தவுடன் உங்களை

அழைத்துவருவதாக சொன்னேன்..ஆனால் அவன் வேகமாக எல்லாத்தையும் நீக்கிவிட்டு...வேண்டாம்..நான் போகிறேன்..அவர் வந்தால் துட்டு கிட்டுகேட்பார்...அதோடு என்னை வைத்து விளம்பரம் செய்வார்கள்...அதுக்கு நான்இப்படியே போய்விடுகிறேன் என்றான்..நான் தடுத்தேன் தள்ளிவிட்டு ஓடிட்டான்".என்றாள்

(இப்போது உள்ள (genetic) மருத்துவ துறையில் அதிகமாக ஆராயப்படுவது இந்த ஸ்டெம்செல்கள்தான்...அண்மையில் AIDS யை ஸ்டெம் செல்களை வைத்து குணப்படுத்தி இருக்கிறார்கள்...இன்னும் நிறைய எதிர்பார்க்கலாம்..அதில் ஒன்றுதான் மேலே சொன்ன கற்பனை.... திசுக்களை,செல்களை வெளியில் வளர்த்துதான் பயன்படுதுகிறார்கள்...வரும் காலங்களில் சில முன்னேற்றங்களை எதிர்பார்க்கலாம்.)

-----------x-----------x-----------x-----------

## 4. யார் நீ

நல்ல வேலை மற்றும் காசு கிடைக்கும் என்பதற்காக GENETIC ENGINEERING படித்து, இப்போது தனியார் ஆய்வுகூடத்தில் நல்ல சம்பளத்தில் வேலை செய்கிறேன்... என் அப்பாவிடம் அதிக பணம் இருந்ததால் என் வீட்டிற்கு சற்று தொலைவில் எங்களுக்கு இருந்த ஒரு இடத்தில் என் ஆசைக்கு இணங்க ஒரு சிறு ஆய்வுக்கூடம் அமைத்தேன்...

முதலில் சிறு சிறு உபகரணங்களுடன் ஆரம்பித்தேன்..பின்னாளில் நான்சம்பாதித்து எனக்கு இப்போதைய தேவைகளுக்கு ஏற்றவாறு மாற்றியமைத்துள்ளேன்...

திருமணம் முடிந்து சில மாதங்கள் தான் ஆகின்றது......மனைவி...... நான் ஏற்கனவே காதலித்த பெண்..கடைக்கண் பார்வையால் சுத்தவிட்டவள்,......கவிதை எழுத வைத்தவள்.

எனது அலுவலக வேலை நேரம் போக மற்ற பெரும்பாலான நேரம் எனது ஆய்வுக்கூடத்திலேயே கழிப்பேன்....சில ஆராய்ச்சிகளில் ஈடுபட்டிருந்தேன் ...அலுவலகத்தில் கிடைக்காத சில சுதந்திரம் எனது சொந்த ஆய்வுக்கூடத்தில் கிடைத்தது..அலுவலகத்தில் எது செய்தாலும் சட்டப்பிரச்சினை...

இது என் காதல் மனைவிக்கு பிடிக்காது....தினமும் அதிகம் நேரம் வெளியில் செலவிடுவது...அவளுடன் நேரம் செலவிடாதது..அவளுக்கு கொஞ்சம் கோபத்தை ஏற்படுத்தியிருந்தது...... சில நேரங்களில் சண்டை பிடிப்பாள்..சிலநேரங்களில் அன்பாக சொல்லி பார்ப்பாள்....ஆனாலும் நான் திருந்துவதாக இல்லை...

அப்படி நான் என்ன ஆராய்ச்சி செய்து கொண்டு இருந்தேன் என்றால்....செயற்கையான முறையில் GENE களை வடிமைத்து கொண்டு இருந்தேன்...

நமது உடம்பில் நடக்கும் எல்லா வேலைகளும் GENE களின் கட்டளைகளின் பேரில்தான் நடக்கும்.ஒவ்வொரு GENE ம் நமது உடம்பில் ஒவ்வொரு வேலைகளுக்கான பங்கை ஆற்றுகின்றன..அந்த GENE களில் உள்ள இயற்கையான பண்புகளின்படி அதன் வேலைகள் இருக்கும்....




அதாவது காதலியை பார்த்தவுடன் மனதுக்குள் பட்டாம் பூச்சிகள் பறப்பது அதே காதலி ஏமாற்றி விட்டு போனபிறகு நொந்து நூலாவது இது எல்லாம் கூட GENE களின் வேலையே...

இப்போது நான் செய்வது அந்த இயற்கையான பண்புடைய GENE களை செயற்கையான(SYNTHETIC GENOME) முறையில் மாற்றியமைத்து அது செய்யும் வேலையில் மாற்றம் கொண்டுவருவது....அதாவது GENE களின் பண்புகளை மாற்றியமைத்தால் அதில் இருந்து வெளிப்படும் ப்ரோட்டீன்கள், ஹார்மோன்கள் எல்லாம் தானாகவே மாற்றம் அடையும்....இவைகள் மாற்றம் அடைந்தால் நமது செல்களின் வளர்ச்சி மற்றும் அது செய்யும் வேலைகளிலும் மாற்றம் ஏற்படும்...இதுதான் என் ஆராய்ச்சி.

முதலில் நான் எடுத்துக்கொண்டது..இரண்டு விசயங்களை GENE களை செயற்கையாக உருவாக்கி மனிதனின் கோபத்தை கட்டுபடுத்துவது...அதாவது கோபம் வரும்போது நான் கண்டுபிடித்த GENE களை அவர்களை சுவாசிக்க வைத்தால் போதுமானது...அப்படியே அமைதியாகி விடுவார்கள்...

உங்களுக்கு புரிந்து இருக்கும் எதற்காக நான் இதை ஆராய்ச்சிக்கு எடுத்து கொண்டேன் என்று......எல்லாம் அன்பு மனைவிக்காகத்தான்..பார்த்து... பார்த்து.....சுற்றி காதலித்தவள்..இப்போது நான் தாமதமாக வந்தாலே தினமும் கோபத்தின் உச்சிக்கே சென்று திரும்புவாள்...இந்த மாதிரி அவளை துன்புறுத்துவது பிடிக்கவில்லை என்பதால் இந்த முடிவை எடுத்தேன்.

மற்றொன்று..மிக முக்கியமானது...மனித மூளையில் இருக்கும் ஒரு பகுதி ஞாபக சக்தியை(explicit memory) முற்றிலுமாக அழிப்பது...இதை செய்வதற்கு வேறு எதுவும் காரணம் இல்லை....என் சிறு முயற்சிக்காகத்தான்....

சில மாதங்கள் கடின முயற்சிக்குபின் இரண்டுமே தயாரானது...எனது ஆசை இதை எப்படியாவது நான் வேலை பார்க்கும் இடத்தில செய்து காட்டவேண்டும் என்பதே....

அன்றும் வழக்கம் போல காலையில் கிளம்பும்போது என் மனைவி.எப்போதும்சொல்வதை சொன்னாள்......இன்னைக்கு சீக்கிரம் வாங்க என்று......கூடுதலாக.....நாளைக்கு எங்களின் திருமண நாள் அதற்க்கு வெளியில் சென்று சிலவற்றை வாங்கவேண்டும் என்று வேறு சொன்னாள்

ஆனால் நான் இதை நினைத்து பார்த்தது..என் அலுவலகம் முடிந்து என் சொந்த ஆய்வுகூடத்தில் சில வேலைகளை செய்து கொண்டு இருக்கும்போது..அவள் தொலைபேசி வழியாக அழைத்தபோதுதான்...என்ன செய்வது என்று தெரியாமல்..பதறிப்போய்..இதோ வந்துவிட்டேன் என்று பொய் சொல்லி அவசரமாக கிளம்பினேன்...

நான் செய்வது எவ்வளவு பெரிய தவறு என்று எனக்கு தெரியாமல் இல்லை...என்னை உயிருக்கு உயிராக காதலித்தவள்....பாசமானவள்..அவளை ஒருவகையில் இப்படி துன்புறுத்துவது எனக்கு கொஞ்சம் கஷ்டமாகத்தான் இருந்தது....

அவசரமாக கிளம்பி வெளியில் போகும் போதுதான் அந்த எண்ணம வந்தது..இன்று எப்படியும் அவள் கோபத்தின் உச்சத்தில் இருப்பாள்....அந்த கோபத்தை குறைக்க நான்

கண்டுபிடித்த அந்த gene spray யை உபோயோகித்தால் என்ன என்று யோசித்து ..வேகமாக சென்று அதை எடுத்து பையில் போட்டு கொண்டேன்....

வீடு சென்று அவளை எப்படியாவது இதை சுவாசிக்க செய்ய வேண்டும்..என்று எண்ணியபடியே உள்ளே நுழைந்தேன்..அவள் மிக கோபமாய் காத்து இருந்தாள்...

அவள் முன்னாடி நான் சென்று நின்றபோதும் கூட பார்க்காததுபோல் இருந்தாள்..நான் மெதுவாக அவள் முகத்தின் அருகில் வைத்து நான் கொண்டு வந்திருந்த அந்த gene spray வை திறந்தேன்...அவள் அதைபார்த்துக்கொண்டே இருக்க...அந்த gene கள் அவள் சுவாசத்தில் கலந்து உள்ளே சென்றது....

அவளின் கண்களில் மாற்றம் தெரிந்தது...கைகளால தலையை பிடித்து கொண்டே என்னை பார்த்தபடி அப்படியே சரிந்து விழுந்தாள்...

எனக்கு திடுக்கென்றது....அந்த gene வேலை செய்தால் இப்படி ஆகாதே..என்று நினைத்தபடியே...அவளை மயக்கத்தில் இருந்து மீட்டு கொண்டுவரும் முயற்சியில் இறங்கினேன்...

முகத்தில் தண்ணீர் தெளிதத பின்னர் கொஞ்சம் கஷ்டப்பட்டு கண்களை திறந்து பார்த்தாள்....இப்போதும் தனது கையால் தலையை பிடித்து கொண்டு இருந்தாள்....

எனை பார்த்தவுடன் அவள் திட்டாததை பார்த்து எனக்கு கொஞ்சம் சந்தோசம்..நல்லவேளை..நமது gene spray வால் பிழைத்தோம்..என நினைத்து கொண்டுஇருக்கும்போதே...
அவள் என்னைவிட்டு கொஞ்சம் விலகி சென்று யார் நீ? என்று என்னை பார்த்து கேட்டாள்.

எனக்கு என்ன செய்வது என்றே தெரியவில்லை...தவறு எங்கு நடந்துஇருக்கின்றது என்று என்னால் உணரமுடிந்தது....ஆய்வுக்கூடத்தில் இருந்த gene பாட்டில்களை எடுக்கும்போது மாற்றி எடுத்து விட்டேன்...நான் எடுத்த பாட்டில் ஞாபகசக்தியை அளிக்கும் ஒன்று.....இதை நான் யோசித்து கொண்டு இருக்கும்போதே..அவள் மீண்டும் கேட்டாள்..

“யார் நீ?????”

((நாம் இப்போது இருக்கும் காலம் gene therapy காலம்...gene களை வெளியில் தனியாக வளர்த்து அல்லது stem cell களின் மூலம் நமது உடலில் ஏற்கனவே பாதிப்படைந்த செல்களை சரி செய்யும் முறை gene therapy...... இதில் பல வகைகள் உள்ளன..இது முன்னேற்றம் அடைந்தால்.. மேலே சொன்னது போல நடக்க வாய்ப்பு இருக்கிறது.)

-----------x-----------x-----------x-----------

## 5. அறுவடை

இப்படித்தான் மனிதர்களா ? என்று நினைத்து தொடக்கத்தில் அவர்களோடு சேராமல் தனித்தே இருந்தேன்.சில வருடங்களில் இப்படித்தான் மனிதர்கள் என்பதை உணர்ந்த போது அவர்களோடு சேரும் எண்ணம் வந்தது. எங்களது தலைமையின் அறிவுரைப்படி மனிதர்களுக்கு என்மீது எந்த ஒரு சந்தேகமும் வரக்கூடாது. அதற்கு நான் மனிதர்களோடு சகஜமாக பழகுவது ரெம்ப முக்கியம்.

மனிதர்களின் சில குணங்களை வெறுத்தாலும் என்னை ஈர்த்தவையும் இருந்தன. உண்மையான அன்பு, பாசம், பரிவு, முக்கியமாக காதல் எனும் உணர்ச்சி இது எல்லாமே எங்கள் இனத்திற்கு புதிய ஒன்று.

வேற்று இனத்தவனான எனக்கு கொடுக்கப்பட்ட வேலை பூமியில் சென்று செல் விளைச்சலை மேற்பார்வையிடுவது. நாங்கள் விதைத்த ஒரு செல் மனிதர்களாக வளரும்வரை காத்து இருப்போம். அதுவும் அவர்களின் பரிணாம வளர்ச்சியில் குறிப்பிட்ட காலம் கடந்து இருக்க வேண்டும். அதாவது மனிதர்கள் தோன்றிய காலத்தில் இருக்கும் மூளைதான் இப்போதும் என்றாலும் அது சிந்திக்கும் திறன் செயல்படும் திறன் வேறு. அதுதான் எங்களுக்கு முக்கியம்.

இந்த செல் வளர்ச்சியில் எங்காவது குறை நடந்தால் எனது குழுவுக்கு அறிவிக்க வேண்டும். அப்படித்தான் கொஞ்சகாலம் முன் மனிதர்களையே அழிக்கக் கூடிய டைனோசர்கள் தவறுதலான ஒரு செல் பரிணாம வளர்ச்சியில் உருவாக அதை அழிக்க எங்களது இனம் பெரும்பாடுபட்டது. ஒருவழியாக எரிகற்களை பூமி பக்கம் செயற்கையாக திருப்பி அதை அழித்தோம். இதுபோல் மனித இனத்திற்கு எந்த ஒரு இடையுறும் இல்லாதவகையில் பார்த்துவருவது என்னை போன்றவர்களின் வேலை.

இதற்காக கிட்டத்தட்ட மனிதனாகவே மாறி வாழ்ந்து வந்தேன். படிப்பது, வேலையில் அமர்ந்து காசு சம்பாரித்து வாழ்க்கை நடத்துவது என எல்லாமே மனித வாழ்க்கை. இது ஒன்றும் எனக்கு கஷ்டமாக தெரியவில்லை. எங்களின் அறிவுத் திறனோடு ஒப்பிடும்போது மனிதன் தூசுதான்.

இருந்தும் இந்த மனித விளைச்சலுக்கு காரணம் அவர்களின் மூளையில் இருக்கும் நியூரான்கள், மற்றும் சில கிலியல் செல்கள். இந்த அமைப்பு எங்களுக்கு இல்லை. எப்படி மனித மூளைக்குள் வேதிவினையில் தகவலை கட்துகிறதோ அதே வேலைக்குத்தான் எங்களுக்கும் அது தேவை.

மனிதர்களை போல எங்களுக்கு பேசும்பழக்கம் இல்லை. தகவலை பரிமாற இந்த நியூரான்கள் தான் அவசியம். போதுமானவரை எங்கள் கிரகத்திலேயே உற்பத்தி செய்தாலும் எங்களின் இனபெருக்கத்தால் வேற்று கிரகத்தில் நியூரான் விளைச்சலுக்கு திட்டமிட்டு கிட்டதட்ட மூன்று கிரகங்களில் செயல்படுத்துகிறோம்.

இது சுழற்சிமுறையில் நடக்கும். எங்களின் தேவையை பூர்த்தியும் செய்தும் வந்தது. பூமி என சொல்லப்படும் இங்கு அறுவடைக்கான காலம் நெருங்கி இருந்தது. இந்த தருணத்தில் தான் என் மனதில் கொஞ்சம் மாற்றம். எங்கள் இனத்துக்கு மனம், உடல், ஆத்மா என்று மனிதர்கள் சிந்தித்து வைத்து இருக்கும் விசயங்கள் தெரியாது. இன்னும் இந்த சித்தர்கள், மந்திரம், கடவுள், என்னவோ சொல்கிறார்கள் எனக்கு யோசிக்கவே கஷ்ட்டமாக இருக்கிறது.

எங்களுக்கு தேவை நியுரான்கள் அதுக்கு இவை எந்த ஒரு தீங்கும் இல்லையென்பதால் கண்டுகொள்ளவில்லை.



ஆனால் எனது நோக்கத்தையே மற்றும் சம்பவம் என்னையறியாமல் என்னுள் நடந்தது வந்திருக்கிறது. அதை மனிதர்கள் காதல் என்கிறார்கள்.அவர்கள் சொல்வதை விட அனுபவிக்கும் போதுதான் சுகமாய் இருந்தது. காரணம் இதுவரை ஆணிடம் பழகியது போல் பெண்களிடம் பூமியில் பழகியது இல்லை. எல்லா பெண்களும் ஒரே மாதிரி பாதிப்பை ஏற்படுத்தாமல் இருப்பதில்லை என்பதை எனக்கு உணர்த்தினாள் அவள். சம்பளத்திற்காக ஒரு நிறுவனத்தில் வேலை பார்த்து வருகிறேன். அங்குதான் அவளை பார்க்க நேர்ந்தது. எனக்கும் மனித ஆண் நண்பர்கள் நிறைய உண்டு. அவர்கள் சொல்லும்போது எல்லாம் இந்த காதல் மீது பெரியதாக ஆர்வமோ ஆசையோ வந்தது இல்லை.

அவளின் துறுதுறு கண்கள், அதைசிமிட்டி பேசும் அழகு எல்லாமே சேர்ந்து என்னை ஏதோ செய்தது. மற்ற பெண்களிடத்தில் பார்த்தது போல இல்லாமல் கண்ணின் நிறம் வித்தியாசமாக இருந்ததும் ஒரு காரணம். என் மனித நண்பர்கள் அதை பூனை கண், பாம்பு கண் என்றார்கள். என்னவோ எனக்கு அது பிடித்து இருந்தது.

அவளை பார்ப்பதுக்கு சுற்றிய தினங்களில் எனக்கு கொடுக்கபட்ட வேலையே முற்றிலும் மறந்தேன். ஒருவழியாக அவளிடம் நட்பு கொண்டு பேசும் அளவுக்கு தேரியிருந்தேன். இருந்தாலும் இந்த மனித உணர்வுகள் பெண்களிடம் பழகும்போது மட்டும் ஏன்தான் இப்படி இருக்கிறதோ தெரியவில்லை.

இதை எல்லாமே அவள் கண்கள்தான் செய்ய வைத்தது. நிறையமுறை சொல்லியிருக்கிறேன் உனது கண்கள் அழகாய் இருக்கு என்று. அதுக்கு அவள் வெட்கம் என்ற சொல் ஒன்றால் தரைபார்த்து குனிவது பிடிக்கும். இருவரும் ஏற்கனவே ஒருவருக்குள் ஒருவர் உணர்ந்து இருந்ததால் நான் முதலில் காதலை சொன்னபோது ஏதும் சொல்லாமல் முன்பு போலவே தரைபார்த்து “நானும்” என்று மட்டும் சொன்னாள்.

அடுத்து வந்த நாள்களில் என்நினைவு மட்டுமில்லாமல் எல்லாவற்றையும் ஆக்கிரமித்து இருந்தாள். அவள் இல்லாத நிமிடங்கள் கண்டிப்பாக தவிர்க்க முடியாத ஒன்றாகத்தான் இருந்தது. எல்லாமே புதிய ஒரு உணர்ச்சிகள், சுகமானதும்கூட. இந்த நேரங்களில் நான் வந்ததுக்கான நோக்கம், என் பணி எல்லாமே மறந்து அவளுக்கான ஒரு தனி வாழ்க்கை வாழ ஆரம்பித்தேன்.

இருட்டியிருந்தது. மாலையில் அவளின் நினைவுகளில் கலந்து இருந்த சமயம். நான் பார்த்து பழகின உருவம். திடுக்கிட்டு எழுந்தேன். இப்போதுதான் எனது வேலையை நான் முற்றிலும் மறந்து இருக்கிறேன் என்பது நினைவுக்கு வந்தது. எங்களின் தகவல் பரிமாற்றம் நியூரான்கள் வழியே என்பதால் சத்தம் இருக்காது. நாங்கள் உள்ளுக்குள் உணர்ந்தாலே, அதுக்கேற்ப விகிதத்தில் நியூரான்கள் வெளிப்பட்டு மற்றவர்களை அடையும் அதை உள்வாங்கி அதை வேறொரு தகவலாக புரிந்து கொள்ளும் அமைப்பு எங்களது.

மனிதர்கள் எப்படி ஒலியை பயன்டுத்துகிறார்களோ நாங்கள் நியூரான்களை பயன்படுத்துவோம். சத்தமாக பேச அதிக நியூரான்கள் செலவழியும், சிதறிபோகும் அவற்றை எங்கள் இனத்தவர் யார் வேண்டுமானாலும் கேட்கலாம். எப்படி மனிதன் கத்தி பேசுகிறானோ அந்த மாதிரி.

“என்ன திடீர் விஜயம்” நான்

“உன்னிடம் இருந்து எந்த ஒரு தகவலும் இல்லையே ஏன்? அறுவடை காலம் வேறு நெருங்கி விட்டது அதான் தலைமை உன்னை பார்த்து விட்டு வரும்படி உத்தரவு” இது அவன்

“ஒன்றுமில்லை எல்லாம் சரியாகத்தான் போகின்றது அதான் ஏதும் தெரிவிக்க வில்லை”

“ஏன் உன் நியூரான்கள் ஒரு சுழற்சியில் வருகிறது மனிதர்களோடு சேர்ந்து நீயும் பொய்யை கற்றுக்கொண்டாயா?”

“பொய் இல்லை”

“சரி அறுவடை தேதி குறித்தாகிவிட்டது. நாளை அல்லது அடுத்த நாள் இருக்கும் அதற்குள் நீ உன் உருவத்தை மாற்றிவிட்டு நமது இடம் வந்தது சேர். கொஞ்ச ஓய்வுக்கு பிறகு வேறு கிரகம் போக வேண்டியது இருக்கும்”

“இல்லை இப்போதைக்கு அறுவடை இங்கு வேண்டாம்”

“ஏன் எல்லாம் சரியாகதானே இருக்கிறது இதுதான் போதுமான சமயம். இதுக்குமேலும் மனிதனின் தரம் உயர்ந்து விட்டால் அவர்களது நியூரான்களில் ஏதாவது மாற்றம் ஏற்பட வாய்ப்பு இருக்கிறது அதை நம்மால் சமாளிப்பது கஷ்டம் உனக்கு தெரியும்தானே”

“தெரியும் அறுவடை செய்யுங்கள் ஆனால் நான் இங்குதான் இருப்பேன்”

“என்னாயிற்று உனக்கு அறுவடையின் போது என்ன நடக்கும் என்று தெரியும் தானே?”

“தெரியும் வழக்கம்போல ஒருவித ஒளிக்கற்றைகள் வைத்து நியூரான்களை எடுத்துவிட்டு அடுத்த சில நிமிடங்களிளியே நெருப்பால் அழிப்போம் நான் நெருப்பில் அழிகிறேன் இங்கேயே நீ அறுவடையை சொன்ன தேதியில் ஆரம்பி”

“இதை தலைமைக்கு சொன்னால் இங்கேயே உன்னை அழிக்க ஆணை வரும் தெரியும்தானே?”

“அதான் நானும் சொல்கிறேன் இங்கேயே அழிகிறேன் என்று.இதற்கு மேல் ஏதும் பகிரவேண்டாம்”

“சரி உன் இஷ்டம் முடிந்தால் முடிவை மாற்று.”

“இல்லை. எனக்கு ஒரு உதவி செய் எப்போது அறுவடை நேரம் எப்போது என்பதை சொல்’

“நாளை மாலை”

போய் இருந்தது அந்த உருவம். பூமிக்கு வந்த பிறகு நான் அடையாத வருத்தம் துக்கம் அப்போது எனக்குள். எதுமே இல்லாமல் எல்லாமே அவளே இருந்தாள்.

மறுநாள் மதிய உணவு இடைவேளையில் நான் ஏதும் பேசாமல் இருக்க அவள் மட்டுமே பேசினாள். ஒருகட்டத்தில் ஏன் அமைதியிருக்கிறாய் என காரணம் கேட்க ஒன்றுமில்லை என்று மட்டும் சொல்லி வைத்தேன். வழக்கம்போல் உதட்டை சுழித்து கண்ணை சிமிட்டினாள்.

எப்போதும் சந்திக்கும் பூங்காவில் அமர்ந்து இருக்க அவளிடம்

“இந்த பூமி அழியும்போது என் பக்கத்தில் நீ இருந்தால் என்ன பண்ணுவே?”

“பெருசா என்ன பண்ண உன் கையை இறுக்க பிடிச்சிக்குவேன்’

“இப்ப பிடிச்சிக்கோ”

“அடப்பாவி சும்மா பிடிக்க சொல்லு பிடிச்சிட்டு போறேன் அதுக்காக இந்த உலகத்தை எதுக்கு அழிய சொல்றே” என்றாள் சிரித்து கொண்டே

“இல்லை இப்ப அழியபோகுது என்னுடைய ஆசையும் அதுதான்’ என்று சொல்லி அவளது கைகளை பற்றினேன்.

“ஏன் ஏதேதோ பேசுறே? கவலையா என்னவோ மாதிரி இருக்க என்னாச்சு?” என்றாள்

பதில் சொல்லவில்லை அறுவடைக்கான அறிகுறிகள் எனக்கு தேறிய ஆரம்பித்தன என் இனத்தவர்கள் செய்யும் வேலைகளை புரிந்து கொள்வது சிரமமாய் இருக்கவில்லை

“பதில் சொல்லு ஏன் இப்படி....”என்று சொல்லி முடிக்கும்போது அந்த ஒளிக்கற்றை எங்களை கடந்து சென்றது அதுக்கு பிறகு நியூரான்கள் இல்லாததால் தகவல் ஏதும் கடத்தாமல் பிரம்மை பிடித்தவள் போல அப்படியே அமர்ந்து இருந்தாள். அந்த அழகான பாம்பு கண் என்னையே பார்த்து கொண்டிருந்தது. கைகளில் கொஞ்சம் தளர்ச்சி. தூரத்தில் பெரிய நெருப்பு வளையம் சுழன்று வருவது அவளது கண்களில் தெரிந்தது. அவளது பிடி தளர்ந்து இருந்தாலும் அவளது கைகளை விரல்களுக்கு இடையில் அழுத்தமாக பிடித்திருந்தேன். கடைசி ஆசைக்காக.

-----------x-----------x-----------x-----------

## 6. யாரு

25:09:2555 – 9:00 am

இந்த கடிதத்தை படித்தவுடன் கிழித்துபோடுவதுடன் இதை பற்றி தொடர்ந்து சிந்திப்பதை உடனே நிறுத்தவும்.

இப்படியொரு கடிதத்தை எழுதுவது யாரென்ற அறிமுகம் தேவையில்லை கிட்டத்தட்ட அழியும் நிலையில் அடித்து ஒடுக்கப்பட்ட மனித இனத்தில் இருந்து வரும் கடிதம்தான்.

நமது இனத்திற்கு இந்த நிலைமை வரும் என்று ஒருபோதும் நினைத்துப் பார்த்தது இல்லை. நாம்தான் எல்லா சக்திகளையும் கொண்டவர்கள் எல்லாம் செய்யமுடியும், இந்த பூமி நமது கட்டுப்பாட்டில் இருக்கிறது என்ற எண்ணத்திலேயே வாழ்ந்து விட்டோம்.

ஆனால் இயற்கை ஒன்று இருக்கிறது, மாற்றம் நிகழும் என்பதை கொஞ்சம் முன்னரே யோசித்து பார்த்து இருந்தால் இந்த நிலை இப்போது இருந்து இருக்காது.

பரிணாம வளர்ச்சியில்தான் மனித இனம் வந்தது என நம்பிய நாம் இந்த மனித இனத்திற்கும் மேல் ஒரு பரிணாமம் இருந்தால்? என்பதை கற்பனைகூட செய்யாமல் விட்டதுதான் பெரிய தவறு. அதுதான் இன்று நடந்து நம்மை அழித்துவிட நினைக்கிறது.

இப்போதைய மனித இனத்தின் நிலை நான் சொல்லித் தெரிய வேண்டியதில்லை. நமது இனம்போலவே நமக்குள்ளவே சேர்ந்து வளர்ந்த அவர்கள் நம்மை அடக்கி ஒரு அடிமையை போல வைத்து இருப்பது எல்லோரும் அனுபவிக்கும் ஒன்றுதான்.

எப்படி நமக்கு கீழ் வாழ்ந்த பிந்தைய உயிரினங்களை அடக்கி ஏன் கொன்று தின்றுகூட வாழ்ந்தோம்.அதே நிலைமைதான் இன்று நமக்கு.

எதிலும் உரிமை இல்லை, எந்த விசயத்திலும் தலையிடக் கூடாது அவர்கள் கொடுக்கிற உணவையும் பொருளையும் வைத்துக்கொண்டு வாழ்க்கையை நடத்த வேண்டும். மீறினால் தண்டனை.

தொடக்கத்தில் புரட்சிகள் செய்து பார்த்தாலும் அவர்களின் அறிவுக்கு முன்னால் நம்மால் முடியவில்லைதான். முழுமையாக ஒடுக்கிய பின் நாம் வாழுகின்ற பகுதிகளில் ரேடார் போன்ற சில உபகரணங்களை வைத்து நாம் மூளையில் இருந்து வெளிவரும் மின் அலைகளை படித்து நாம் என்ன யோசிக்கிறோம் என்பதை கண்டுபிடித்து விடுகிறார்கள். இதனால் புரட்சி பற்றி யோசித்தாலே அடுத்த சில நிமிடத்தில் வந்து தூக்கிப் போகிறார்கள்.

தண்டனை என்ற பெயரில் அடைத்து வைக்கப்பட்டு கிட்டதட்ட 2000 பேர் சேர்ந்த பிறகு மொத்தமாக ஒரு விண்கலத்தில் பூட்டி எரிபொருள் முழுவதும் நிரப்பி மேலே பறக்கவிட்டுவிடுகிறார்கள்.அந்த விண்கலம் எரிபொருள் தீரும்வரை மேல்நோக்கி மட்டுமே போகும்.தீர்ந்தபின் அங்கேயே மிதக்கும். மனித இனம் மற்றொரு முறை தவறுதலாககூட இந்த பூமியில் வந்துவிடகூடாது என்பதுதான் அவர்களின் நோக்கம்.

இந்த உலகமே அவர்களின் கட்டுப்பாட்டில்.காரணம் அவர்களின் ஒற்றுமை. நாம் பிரிந்து கிடந்தோம் அழிந்தோம். அவர்கள் அறிவால் சேர்ந்து இருக்கிறார்கள். நமது அறிவியல்

கண்டுபிடிப்புகள் எல்லாம் அவர்களின் அறிவுக்கு முன் மதிப்பற்று கிடக்கிறது. தோல்விக்கு இதுவும் ஒரு காரணம்.

அவர்களின் முதல் வெற்றியே மனிதர்களோடு மனிதனாக வாழ்ந்து கடைசியில் நம்மை வென்றதுதான்.

இதை தொடக்கத்தில் மனிதன் உணர்ந்து அவர்களை பற்றிய உண்மைகளை அறிய முயலும் முன்னரே ஒன்று சேர்ந்து நம்மை வீழ்த்தி விட்டார்கள். நம்மைவிட நான்கு குரோமோசோம்கள் அதிகம், சிந்திக்கும்திறன், மூளையின் அளவு என சின்ன சின்ன மாற்றங்கள். இதுதான் மனித இனத்தில் கால்பங்குகூட இல்லாத அவர்கள் நம்மை ஆள்வதுக்கு காரணம்.

நான் தெருவில் இறங்கி புரட்சி செய்ய இந்த கடிதத்தை அனுப்பவில்லை. அவர்களை அறிவால் வெல்லுவோம். கடிதத்தை படிக்கும் எல்லோரும் அதை எப்படி சாதிக்கலாம் என்பதில் கவனம் செலுத்துங்கள்.

வெகு நாட்களாக இந்த கடிதத்தை நான் எழுத காத்து இருந்தேன். இன்றுதான் எனது தெருவில் வைக்கப்பட்டு இருக்கும் ரேடார் பழுதடைந்து அதை சரிபார்க்கும் பணியில் அவர்கள் ஈடுபட்டுக்கொண்டு இருக்கிறார்கள். இது உண்மையா தெரியவில்லை இப்படித்தான் போனமுறை பக்கத்துக்கு தெருவில் இப்படி செய்தி பரவியது. மனிதர்கள் எல்லாம் கிடைத்த நேரத்தில் ஒன்று கூடி புரட்சி பற்றி யோசிக்க அந்த தெருவே விண்கலத்தில் ஏற்றப்பட்டது. அந்த செய்தி அவர்களால் பரப்பப்பட்ட தவறான செய்தி.

இந்த செய்தியும் உண்மையா தெரியவில்லை. பொய்யாக இருந்தால் நானும் விண்கலம் ஏற வேண்டும். கவலை இல்லை இந்த கடிதம் உங்களுக்கு கிடைத்து புரிந்து கொண்டு செயல்படுத்தும்போது நான் இல்லாவிட்டாலும் அதுக்கு காரணமாக நான் இருந்ததுக்கு சந்தோசப்பட்டு கொண்டே விண்வெளி போவேன்.

முதன்மை உயிரினம் என்பது போய் நமக்கு மேல் உள்ள அவர்களுக்கு கட்டுப்பட்டு கிடக்கிறோம். அவர்களை வெல்வது சுலபம் இல்லை. ஆனால் முடியும் அவர்களிடமிருந்தே பல விசயங்களை கற்று அதையே எதிராக பயன்படுத்துவோம். அவர்கள் நம்மில் இருந்து வந்தவர்களே.

இவ்வளவு விளக்கமாக சொல்வதுக்கு காரணம் என்னைபோன்ற பழமையான மனிதர்களுக்கு தெரியும் மனித இனம் முன்னர் எப்படி வாழ்ந்தது என்று. ஆனால் அடிமைபடுத்திய பின்னர் பிறந்த சிலருக்கு நம்மின் முந்தைய நிலை தெரியாது. அவர்களை பொறுத்தவரையில் மனிதன் என்பவன் தனக்கு மேல் உள்ள ஒரு இனத்திற்கு அடிமை என்பதே. இந்த கடிதத்தின் நோக்கமும் இந்த நிலை மாறவேண்டும் என்பதே.

அதே நேரத்தில் உணர்ச்சி கொண்டு புரட்சி என்ற பெயரில் எதாவது செய்து விண்கலம் ஏறுவதைவிட நல்லதொரு வாய்ப்புக்கு காத்து இருப்போம்.கண்டிப்பாக அறிவை தவிர வேறொன்றை கொண்டும் இவர்களை ஜெயிக்க முடியாது என்பதை கவனத்தில் கொள்ளவேண்டும்.

இந்த ரேடார் சாதனம் இன்னம் சில நாள்களுக்கு சரியாகவில்லை என்றால் இன்னும் சில முக்கியமான விசயங்களை பற்றி கடிதம் எழுதுகிறேன்

எழுதிய கடிதத்தை வேகமாக மடக்கி பையில் வைத்து கிளம்பும் வேளையில் வெளியில் அவர்களின் அந்த அறிவுப்பு வந்தது....

"உங்கள் தெருவில் பழுதடைந்து இருந்த ரேடார், மற்றும் தானியங்கி பொருள் வழங்கும் இயந்திரம் சரியாக **8:45 am** முதல் வேலை செய்ய ஆரம்பித்து விட்டது. இனிமேல் தவறுகள் நடக்காமல் பார்த்து கொள்கிறோம்" என்று ஒலித்த சில நிமிடங்களில் அவரின் கதவு அவசரகதியில் தட்டபட்டது

-----------x-----------x-----------x-----------

## 7. நாம்

புத்தி அவரது அறையில் இருக்கிறாரா? இல்லையா? என்பதைஅங்கு இருந்து வரும் புகையினை வைத்தே சொல்லிவிடலாம். அதிக புகைபழக்கம் கொண்டவர். அந்த அறையில் நான்கு சுவர்களுக்கு பதிலாக புத்தகங்கள் வரிசையாக அடுக்கப்ட்டு இருக்கும்.கிட்டத்தட்ட 500 க்கும் மேற்பட்ட புத்தகங்கள். அவரிடத்தில் பொறாமை கொள்ளும் விசயங்களில் இதுவும் ஒன்று.

அவரது பதிலளிக்கும் விதம வித்தியாசமானது. கேள்விக்கு வெளிப்படையாக பதிலை சொல்லாமல் அந்த விசயத்தை பற்றி நான் எவ்வளவு எப்படி தெரிந்து வைத்து இருக்கிறேன் என்பதை முதலில் தெரிந்துவிட்டு அதுக்கு தகுந்த மாதிரி பதிலளிப்பார்.

நான் இந்த முறை போனபோது வாசலிலேயே நின்று இருந்தார்..பார்த்தவுடன்..

“என்ன கணேஷ் நீ மட்டும் தனியா வருகிறாய் புனியை எங்கே?”

“எப்போதும் அவளோடு சுத்தும் பழக்கம் இல்லை ..எனக்கு பிடித்தாலும் அது அவளுக்கு பிடிக்காது” என்றேன்.

“சரி என்ன இந்த பக்கம் காரணம் இல்லாமல் வரமாட்டியே? ஏதாவது புத்தகம் வேணுமா என்ன?”

“இல்லை ஒரு சந்தேகம் அதான் கொஞ்சம் பேசிவிட்டு போகலாம்னு வந்தேன்’

“அப்படியா இப்ப என்ன புதுசா சந்தேகம்?” என்றார்

“உங்களுக்கு தெரிஞ்சவரையில் வேற்றுகிரக வாசிகள் இருப்பது உண்மையா? அப்படியே இருந்தாலும் நமது பூமிக்கு வருவது சாத்தியாமா என்ன?”

“கொஞ்சம் கஷ்டமான கேள்வி.. சரி நீ சொல்லு வெற்று கிரகங்களில் உயிர் வாழ்வதுக்கான சாத்தியம் இருக்கா இல்லையா?”

“கண்டிப்பா இருக்கு..ஆனால் அது நம்ம மாதிரி இருக்கணும்னு அவசியம் இல்லை அங்கு இருக்கிற தட்ப சூழ்நிலைக்கு ஏற்றமாதிரி இருக்கலாம்..அதை நாம் கற்பனை செய்து பார்த்து சொல்வது கஷ்டம்” என்றேன்

“நீ சொல்வது சரிதான். அப்படியே இருந்தாலும் நமது கிரகத்தில் நம் இருப்பை கண்டுபிடித்து அவர்கள் வருவது நடக்கின்ற காரியம்னு நினைக்கிறியா?”

“இதில்தான் எனது சந்தேகம். குறிப்பாக கண்டுபிடித்து வருவதற்க்கு வாய்ப்பு மிக மிகக் குறைவு. தற்செயலாக நிகழ்ந்தால் உண்டு. அதுவும் விண்வெளியில் இருக்கும் பயண சிக்கல்கள், பயண நேரம் இவற்றை எல்லாம் வைத்து பார்க்கும்போது தற்செயலாக மட்டுமே நிகழ வாய்ப்பு இருக்கிறது”



"ஏன் அவர்களிடத்தில் நாம் கற்பனை கூட செய்து பார்க்கமுடியாத அளவுக்கு முன்னேற்றம் இருந்தால்..அதாவது நாம் நினைத்து கொண்டு இருக்கிற அதிக வேகம் கொண்ட ஒளியின் வேகத்தைவிட பயணிக்கும் வசதி இருந்து அதன் மூலம் வேகமா வர வாய்ப்பு இருக்கிறதே?"

"இந்த விதத்தில் பார்த்தாலும் நமது பூமிக்கு குறிப்பாக வருவது என்னை பொறுத்தவரை தற்செயல்தான்" என்றேன்

"சரி திடீர்னு இதைப் பற்றிய சந்தேகம் உனக்கு எதுக்கு?"

"மனிதர்கள் வேற்றுகிரகவாசிகள் சிலரை பிடித்து சோதனை செய்வதாக சில புகைப்படங்களை பார்த்தேன் அதான் உங்களிடம் வந்தேன்" என்றேன்.

"அந்த புகைப்படங்ககள் எப்படி இருந்தது?"

"அவர்கள் கிட்டதட்ட நம்மை போலவே இருந்தார்கள், கால்கள், கைகள், ஏன் விரல்கள் கூட....உடலமைப்பும் அப்படியே நம்ம மாதிரியே.." என்றேன்

நான் சொன்னவுடன் புத்தி சிரிக்க ஆரம்பித்து இருந்தார். எனக்கு புரியவில்லை ஏன் என்று...

"சரி என்னை சோதித்தது போதும்! அவர்கள் இப்படி வருவது உண்மையா என்ன?" என்றேன்

"இதுக்கு விடை நீயே சொன்னியே" என்றார் சிரித்துகொண்டே..

"அப்ப குறைவான சாத்தியம் என்றால் இவர்கள் வந்தது தற்செயலான விஷயம்னு சொல்றிங்களா?"

“ஆமாம் அந்த தற்செயலில் எந்த அளவு வாய்ப்பு இருக்கிறது என்றால் ஆயிரத்தில் ஒன்று கூட தேறாது. நமது பிரபஞ்சத்தின் அளவோடு ஒப்பிட்டு யோசிக்கும் போது அவர்கள் இங்கு வருவதுக்கு” என்றார்.

“அப்படின்னா இந்த மாதிரி வருபவர்கள் யார்?”

“வேற்றுகிரக வாசிகள் இல்லை நம்மவர்கள்தான்”

“மனிதர்களா?”

“ஆமாம் கண்டிப்பா. அது மனிதர்களே தான். அதான் நீயே சொன்னியே எல்லாமே நம்மை போலவே இருக்குன்னு”

“இருந்தாலும் இது எப்படி சாத்தியமாகும் நம்மவர்கள் பறக்கும் தட்டுகளில் அல்லது வேறேதாவது விமானத்தில் வந்து வித்தியமாக இறங்குவது?”

“அது கால இயந்திரம் அவர்கள் வசிப்பதும் இதே பூமியில்தான். எல்லாம் காலம் சம்பந்தப்பட்டது” என்றார்

“சுத்தமா புரியலை” என்றேன்

“உனக்கு கால இயந்திரத்தின் மூலம் பயணித்தால் காலத்தில் பின்னோக்கி செல்லலாம் என்பதில் நம்பிக்கை இருக்கா?”

“இருக்கு”

“அப்படியே போகின்றாய் என்று வைத்து கொள்வோம் நீ போகின்ற இடத்தில வாழும் மக்கள் நீ இருக்கும் இதே நிலையில் இருப்பார்கள் என்று அர்த்தமில்லையே, அதாவது அவர்கள் அந்த காலத்துக்கு ஏற்ற மாதிரி இருப்பார்கள் ..வாழ்வார்கள். சொல்வதென்றால் அவர்கள் உன்னை பார்த்தால் நீ அவர்களுக்கு ஒரு வேற்றுகிரகவாசி”

“அப்படின்னா இவர்கள் மனிதர்களின் முன்னோடியா இல்லை ஏற்கனவே வாழ்ந்து அழிந்தவர்களா?”

“காலத்தில் அழிவு என்று ஒன்றும் இல்லை, நீ எதை வேண்டுமானாலும் கால இயந்திரத்தின் மூலம் சென்று அது இருப்பதை பார்க்க முடியும் போது. அதன் படி பார்த்தால் நமக்கு முந்தைய உலகம் இன்னும் உயிரோடுதான் இருக்கிறது. எதிர்கால உலகமும் இதே பூமியில் வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறது” என்றார்

“அப்படி என்றால் இவர்கள் மனிதர்களில் இருந்து செல்கள், ஜீன் களில் mutation ஏற்பட்டு பரிணாம வளர்ச்சி பெற்ற நம்முடைய அடுத்த கட்ட இனம் என்கிறீர்களா?”

“கண்டிப்பாக...... காலத்தில் பின்னோக்கி வந்து இருக்கிறார்கள் அவர்கள் வாழும் காலத்தில் இருந்து. அதாவது அவர்கள் நமக்கு முன்னாடி இருக்கும் காலத்தில் வாழ்பவர்கள்.”

கொஞ்சம் யோசிக்கவே சிக்கலாக இருந்தது. நமக்கு முன்னாடி ஒரு காலம், அதிலும் வாழ்க்கை என்பதை...

“எனது அடுத்த முப்பது வருஷம் கழிந்த வாழ்க்கையை பார்க்கமுடியும் அப்படித்தானே?”

"பார்க்க முடியும் ஆனால் அங்கு போய் வாழ, ஏதாவது மாற்றம் செய்யமுடியாது ஏனென்றால் அவர்களுக்கு நீ ஒரு வேற்றுகிரகவாசி. பிடித்துவைத்து சோதிப்பார்கள்'

"இப்படி தொடர்ந்து கொண்டே போனால் முதல் தலைமுறை எது என்று எந்த வருடத்தில் போய் கண்டுபிடிப்பது?" என்றேன்

"அது அவர்களே பின்னோக்கி வந்து சொன்னால் ஒழிய யாருக்கும் தெரிய வாய்ப்பே இல்லை."

"இதை எல்லாம் நான் எப்படி நம்புவது?"

"நீயும் முன் அல்லது பின் காலத்துக்கு சென்று பார்க்காமல் இதை நம்ப முடியாது என்ன போகிறாயா? பிடித்து வைத்து சோதிப்பார்கள்' என்றார் சிரித்துகொண்டே

-----------x-----------x-----------x-----------

## 8. அது

இதுக்கு மேலும் பொறுத்து இருக்க பொறுமையில்லை. அதை தேடி நிறைய படித்து குழம்பியாகிவிட்டது. விடைதான் கிடைத்தபாடில்லை. ஐன்ஸ்டீன் சொன்னதில் இருந்து ஏதாவது கிடைக்கும் அல்லது ஹாக்கிங் எதாவது புதியதாக செய்வார் என்று இதுவரை பொறுமையாக காத்து இருந்துவிட்டேன்.

சரி அறிவியலில்தான் விடை கிடைக்க நேரம் ஆகும், ஆன்மீக வழியில் எதாவது கிடைக்குமா என்று யோசித்தால் அந்த பக்கம் போகவே பிடிக்கவில்லை. நான் அதை கொடுக்கிறேன், இதை கொடுக்கிறேன், முக்தியை அடையபோகிறேன் என்று நல்ல இலக்கண நிறைந்த தமிழை பேசிக்கொண்டு ஆசிரமங்கள் துறந்துவிட்டு பின் பெண்களுக்காக கதவையும் ஜன்னலையும் மட்டுமே திறப்பதில் குறியாயிருக்கிறார்கள். அவர்களுக்கு ஆன்மீகம் தன்னை ஒரு நல்லவனாக காட்டவும், அதுக்கு பின்னாடி ஒளிந்து கொண்டு சில வேலைகளை செய்ய மட்டுமே என்பதை உணர்ந்தேன்.

பயனில்லாமல் போனதால் நானே எனது முயற்சியை தொடங்க தீர்மானித்து அதற்கு உரிய வேலைகளை துவங்கியிருந்தேன். மற்றவர்களை போல துவக்கத்தில் இருந்து ஆராய்ச்சி செய்து அது தவறு இது தவறு என்று ஆராய்ந்து எனது பதிலை தேடினால் அதுக்கு என் வாழ்க்கையில் மீதி இருக்கும் நாள்கள் போதாது. எனவே வித்தியாசமாக வேகமாக எதாவது செய்ய எண்ணினேன்.

எனது முறைக்கு சாத்தியம் நிறையவே இருந்தது. அதாவது ஒரு மூளையை ஸ்டெம் செல்கள் மூலம் தனியாக வெளியில் வளர்த்து அதை செயற்கையாக கட்டுப்படுத்தி இதுவரை நாம் கண்டுபிடித்த எல்லா தகவல்களையும், தத்துவங்ககளையும் அதற்குள் கொடுத்து அதை புரிந்து கொள்ள செய்து அதனிடம் நமக்கு வேண்டிய கேள்விகளை கேட்டால் பதில் தரும்படி அமைப்பதுதான் எனது முறை.

இது எப்படி கணினி hard disk-ல் எல்லாத் தகவல்களையும் சேமித்து வைத்துவிட்டு தேவையான தகவல்களை தெரிந்துகொள்வது போன்றதுதான். கணினிக்கும் நான் செய்ய போகும் முறைக்கும் சில வித்தியாசங்கள் உண்டு. மூளை கொடுத்த தகவல்களை ஒன்றோடு ஒன்று பொருத்தி பார்த்து அதில் இருந்து தானாக யோசிக்கும். அதோடு சிந்தனை திறனும் அதிகம்.



இதுவரை ஸ்டெம் செல்களை வைத்து மூளையின் பாதிப்படைந்த (அல்சீமர் நோயால்) செல்களை மட்டுமே புதுப்பித்து கொண்டு இருந்தனர். இதில் அடுத்த கட்டமாக மூளையையே புதியதாக உருவாக்க போகிறேன்.

சிரமமான விசயம் அதை தனியாக உருவாக்கி, செயற்கையாக oxygen கொடுத்து metabolism நடக்க வைத்து, அதில் உள்ள பில்லியன் நியூரான் செல்களை கட்டுப்படுத்துவது.

புதியதாக சில மாற்றங்களை செய்தேன் வெறும் மூளை மட்டும் என்பதால் அது நமது உடல் செய்யும் அன்றாட பணிகளுக்கான கட்டளைகள் கொடுக்கும் தன்மையை தடுத்து இருந்தேன். இதன் மூலம் அதன் திறன் அதிகரிக்கும் என்ற எண்ணம. அதாவது அதன் வேலை கொடுத்த தகவல்களின் அடிப்படையில் யோசித்து பதில் அளிப்பது மட்டுமே.

எனக்கு இருந்த சில சந்தேகங்கள் வைத்தியிடம் வேலைபார்க்கும் புனியின் உதவியால் தீர்ந்தது. நல்ல அறிவாளி பெண்.குறைவாக பேசி நிறையா யோசிப்பவள். அவளின் அறிவை விட அவள் பேசும் அழகு, யோசிக்கும் வேளைகளில் அவள் செய்யும் பாவனைகளை பிடித்து இருந்ததுதான் உண்மை.

அவளின் உதவியால் ஸ்டெம் செல்களை பிரித்து க்ளோனிங் முறையில் மூளையை உருவாக்கி இருந்தேன். அது இப்போது நான் செயற்கையாக உருவாக்கியிருந்த ரத்தத்தை அனுப்பும் இயந்திரத்தின் உதவியுடன் சுவாசித்து கொண்டு இருந்தது.

வெற்று மூளை எதாவது தகவல்களை கொடுத்து அது சம்பந்தமான கேள்விகளை கேட்டால் பதில் அளிக்கும் அவ்வளவே.

அதுக்கு தகவல்களை கொடுப்பதும், பெறுவதும் பெரிய விசயமாக இல்லை. மூளைக்கு நமது உடலின் பகுதிளில் இருந்து உணர்வு தகவல்களை பரிமாற்றம் செய்யும் dendrite-ஐ இந்த தகவல் பரிமாற்றத்துக்கு பயன்படுத்தியிருந்தேன்.

நான் கொடுக்கும் தகவல்கள் dendrite உதவியால் axon வழியாக நியுரான்களுக்கு neurotransmitter மூலம் கடத்தப்பட்டு சேமித்து வைக்கப்படும்.
நியூட்டன் காலத்திற்கு முன்னால் இருந்து இப்போது வரை உள்ள எல்லா தகவல்களையும் உள்ளே அனுப்பும் எனது வேலை அடுத்த சில நாள்களில் முடிந்திருந்தது. இடையிடையே எப்படி வேலை செய்கின்றது என்பதை சில கேள்விகள் கேட்டு சோதித்து பார்த்ததில் நான் நினைத்ததைவிட அருமையாகவே வேலை செய்தது.

கொஞ்சம் ஓய்வு கொடுத்து விட்டு எனக்கு விடை கிடைக்க வேண்டிய கேள்வியை கேட்க எண்ணி அதுக்கு தயார் செய்தேன். கேள்விக்கான எல்லா தகவல்களும் கொடுத்தாயிற்று. அதுக்கு தெரியாத ஒன்றுமே இல்லை என்ற நிலை. எனது கேள்விகளை கோர்வையாக உள்ளே அனுப்பினேன்..

1) **பிரபஞ்சம் முதலில் எப்படி தோன்றியது?**
2) **தானாக தோன்றியதா? எதாவது ஒரு சக்தியால் தோற்றுவிக்கப்பட்டதா?**
3) **அப்படியெனில் அந்த சக்தி என்ன?**
4) **அதை சரியாக புரியும்படி விளக்க முடியுமா?**

இந்த கேள்விகளை உள்ளே அனுப்பிவிட்டு பதிலுக்கு காத்து இருந்தேன். இந்த நேரத்தில் உள்ளே செல்லும் oxygen அளவை அதிகரித்து இருந்தேன் அது யோசிக்க மிக உதவியாக இருக்கும் என்பதற்காக.

தகவல்களை கொடுக்க ஆரம்பித்து இருந்தது. அதை கணினி புரிகின்ற மொழியில் மாற்றி கொடுத்தது. அதை படித்து முடித்த போது வெறுப்புதான் மிஞ்சியிருந்தது. அதை அப்படியே இங்கே கொடுக்கிறேன்...

இது மிக எளிமையான கேள்விகள்தான் பதில் சொல்கிறேன். இருந்தாலும் நீ அதிகம் கேள்விகள் கேட்கின்றாய். காதலிக்க ஏதும் பெண் கிடைக்க வில்லை என்பது உன் இந்த தேடலில் இருந்து தெரிகின்றது. இதற்கான பதிலுக்கு நீ இன்னும் கொஞ்சம் உழைக்க வேண்டும். அந்த முறையைத்தான் உனக்கு சொல்ல போகிறேன். அதில் உனக்குண்டான பதில் கண்டிப்பாக கிடைக்கும். இதோ..

முதலில் ஒரு மூளையை செயற்கையாக உருவாக்கி அதை உன் கட்டுப்பாட்டில் வைத்து அதற்குள் தகவல்களை கொடுத்து அந்த தகவல்களில் இருந்து பதில்கள் கிடைக்கும் வகையில் உருவாக்கு. எனது அறிவின் மூலம் உனக்கு இதைத்தான் சொல்ல முடியும். ஆனால் நான் சொன்ன இந்த முறையில் கண்டிப்பாக உன் கேள்விக்கு விடைகிடைக்கும்.

இதை சொல்லி முடித்து விட்டு வழக்கம் போல ..

“வேற ஏதும் கேள்விகள் இருக்கா?” என்றது

(மேலே சொல்லியிருப்பது பொதுவாக நமது மூளை வேலை செய்யும் விதம்தான். நமது மூளையில் பில்லியன் அதிகமான நியூரான்கள் இருக்கும். இது கொஞ்சம் வித்தியாசமான செல்கள். ஒவ்வொரு செல்லும் ஒரு உடலமைப்பை கொண்டு இருக்கும். அதன் பெயர் axon. இதுதான் ஒரு நியூரான்களில் இருந்து மற்ற நியூரான்களுக்கு தகவல்களை கடத்தும். இந்த செல் உடலமைப்பு மற்ற செல்களைப் போலவே ஒரு nucleus ஐ கொண்டு அதன் மூலம் நியூரான் செல்களை கட்டுப்படுத்தும் வேலைகளை பார்க்கும்.

உடலில் உள்ள உணர்வு செல்களில் இருந்து முதலில் dendrite பகுதி வழியாக நியூரானுக்கு தகவல்களை கடத்தி பின் axon மூலம் மற்ற நியூரான்களுக்கு வேதி வினை பொருள்கள் (neurotransmitter) மூலம் தொடந்து கடத்துகின்றது.)

-----------x-----------x-----------x-----------

## 9. விடை

பலமாத உழைப்பு முடிவுக்கு வரும் தருவாயில் இருந்தாலும் இறுதிக்கட்டத்தை நெருங்க நெருங்க வைத்திக்கும்,புனிக்கும் மனதுக்குள் பயம் அதிகமாகியதுதான் உண்மை.

உலகத்தில் இல்லாத புதியமுறை அதுவும் மனித உயிர் சம்பந்தப்பட்டது. தோல்வியில் முடிந்தாலும் பிரச்சினையில்லை, இதனை உபயோகித்து உயிர் சேதம் ஏதும் ஏற்ப்பட்டால்தான் பிரச்சினை.

இதில் புனியின் பங்கு கடந்த காலத்தைவிட மிக அதிகம். இயந்திர வடிவமைப்பில் இருந்து வைத்தியின் சிறு சிறு கவனக்குறைவு, பிழைகளை சுட்டிகாட்டி திருத்துவதிலும் அவளின் பங்கு இருந்தது. இதன்மூலம் வைத்தியின் பாராட்டுக்கும் அவருக்கு மிக பிடித்தமானவளும் ஆகியிருந்தாள்.

அவர்களின் ஆய்வுகூடத்தில் ஒரே மாதிரியான இரண்டு ஆளுயர கண்ணாடி குடுவை போன்று இருக்க, ஒன்றன் பின்னாடி மட்டும் சில சிறிய கண்ணாடி குடுவைகள் இருந்தன. மற்றொன்றில் அந்த இடத்தில் இருந்து அதற்கு பதில் வெறும் வயர்கள் மட்டும் பொருத்தப்பட்டு இருந்தன. ஒன்று ஆய்வுகூட கணினியில் பொருத்தப்பட்டு அதில் எதையோ புனி சரிபார்த்துகொண்டு இருந்தாள். மற்றொன்றில் வைத்தி வேலை பார்த்துக் கொண்டு இருந்தார். எல்லாம் இறுதிகட்ட சரிபார்ப்பு. அடுத்த நாள் சோதனைக்கு முடிவு எடுத்து இருந்தார்கள்.

மறுநாள் காலையில் வைத்தியும், புனியும் ஒருவித பயம் கலந்த கவலையில் வேலையை பார்த்துக் கொண்டு இருந்தார்கள். மேஜையில் வைக்கப்பட்டு இருந்த பூனைகுட்டி அடுத்து என்ன நடக்கபோகின்றது என்பதை அறியாமல் அதன் கூண்டுக்குள் கத்தியபடி சுற்றி வந்துகொண்டு இருந்தது.



வைத்தி புனியின் உதவியுடன் அதில் இருந்த ஒரு குடுவையை தூக்கி கொஞ்ச தூரத்தில் இருந்த மற்றொரு அறையில் வைத்து அதை கணினியுடன் இணைத்து இயங்கும் தன்மையை சோதித்துப் பார்த்துவிட்டு, மற்றொரு குடுவையை அவரது அறையில் இருந்த கணினியுடன் இணைத்து அதையும் இயக்க துவங்கினார்.

மற்றொரு அறையில் வைக்கப்பட்டு இருக்கும் குடுவையின் பின்பக்கம் பொருத்தப்பட்டு இருந்த சின்ன குடுவைகளில் ரத்தம் மற்றும் சில அமிலங்கள் என அதிகமாக நிரப்பப்பட்டு இருந்தது. அந்த இரண்டு குடுவைக்கும் பொதுவாக நடுவில் ஒரு வட்டவடிவ இடம் இருந்தது. அதை சுற்றி ஒரு வளையத்தில் இணைக்கப்பட்ட லேசர் ஒளி பாச்சும் கருவிகள் இருந்தன. அது நீளவாக்கில் மேலும் கீழும் நகரும்படி அமைக்கப்பட்டு இருக்க, அதற்கு அடுத்த பகுதியில் அந்த குடுவையை மூடும் கண்ணாடி கதவு இருந்தது.

கையில் இருந்து திமிரப் பார்த்த பூனையை அழுத்திப் பிடித்து அந்த குடுவைக்குள் விட்டார் வைத்தி. கதவு மூடியதும் பயத்தில் பூனை நகத்தால் கண்ணாடி கதவை பரண்டியது. வைத்தி சிறு தயக்கத்தோடு புனியை பார்க்க, அவள் ஏதும் சொல்லாமல் அதே பார்வை பார்த்தாள். வைத்தி அந்த குடுவையை இயக்கத்திற்கு கொண்டு வந்தார்

அதுவரை பிறாண்டிக் கொண்டிருந்த பூனையின் மீது, மேல் இருந்து வந்த லேசர் ஒளிக்கற்றை பட்டதும் அப்படியே அசையாமல் நின்றது. அந்த ஒளிக்கற்றை திரும்பி மேலே போய் கீழே திரும்பியது இப்போது பூனையின் உருவத்தில் கொஞ்சம் மாற்றம் இருந்தது. இந்த செயல் தொடர்ந்து நடக்க அதற்கு ஏற்றாற்போல பூனையின் உருவத்திலும் குறைவு வந்துகொண்டே இருந்தது. லேசர் ஒளி மேலேபோய் கடைசியாக நின்றபோது கிழே பூனை இருந்த இடத்தில அது காணாமல் போய் இருந்தது.

இதுவரை இதை பார்த்துகொண்டு இருந்த வைத்தியும் புனியும் ஒரு பெரு மூச்சோடு கணினியை நோக்கி ஓடினார்கள். கணினி சில தவல்களை இவர்களுக்காக தயாரிக்கும் பணியில் இருக்க முடிவுக்காக காத்து இருந்தார்கள்.

| Sequence name | Length (bp) including gaps |
|---|---|
| chrA1 | 279,330,936 |
| chrC1 | 231,559,387 |
| chrA2 | 217,619,046 |
| chrB1 | 216,457,954 |
| chrA3 | 170,549,644 |

இப்படி பலபக்கங்ககளுக்கு தொடர்ந்து கொண்டே செல்ல கடைசியாக அந்த பூனையின் ஜீனோம் படித்து முடிக்கப்பட்டு கணினி திரையில் காட்டப்பட்டது. எத்தனை செல்கள், என்னென்ன ஜீன்கள் என எல்லா தகவல்களும். இது வைத்தி கண்டுபிடித்திருக்கும் புதியமுறை. சாதராண முறைப்படி ஒரு பூனையின் ஜீனோமை படிக்க பல மாதங்கள் ஆகும். ஆனால் இந்த முறையில் சில நிமிடங்கள்தான்.

கணினி திரையில் அந்த தகவலை அனுப்ப அனுமதி கேட்க. .வைத்தி புனியை மற்றொரு அறையில் கணிணியோடு இணைக்கப்பட்டு இருக்கும் அந்த குடுவைக்கு சென்று இயக்கத்தை சரிபார்க்குமாறு சொல்லிக்கொண்டே பூனையின் ஜீனோமை அனுப்பினார்.

வந்திருந்த அந்த தகவலை புனி பதற்றத்தோடு அந்த குடுவைக்கு அனுப்பினாள். அடுத்த நிமிடத்தில் அந்த குடுவையின் உள்ளே வேகமாக வேலைகள் நடக்க ஆரம்பித்தன. கொஞ்சம் ரத்தம், அமினோ அமிலங்கள், ஹார்மோன்கள் எல்லாம் குறைந்து இருந்தன. குடுவையின் இயக்கம் நின்று இருந்த போது அந்த கண்ணாடி கதவை பூனை பிறாண்டிகொண்டே கத்தியது.

இருவருக்கும் சொல்லமுடியாத சந்தோசம். புனியின் கண்களில் கண்ணீரே வந்து இருந்தது. வைத்தி வேகமாக சென்று குடுவையின் கதவை திறந்து அதை கையில் எடுத்து சோதித்துப் பார்த்தார். சற்று முன்னர் வேறொரு குடுவையில் விட்ட அதே பூனை.

“ஏதாவது மாற்றம் இருக்கா?” கேட்டாள் புனி

“ஆமாம் இருக்கு. முடியின் நீளம் கொஞ்சம் கம்மியா இருக்கு” என்றார்

“ஒருவேளை லேசர் ஒளிக்கற்றை தொடங்கும்போது கொஞ்சம் வெப்பத்தில் கருகி இருக்குமோ?”

“இருக்கலாம்” என்றார்

அடுத்த வந்த நாள்களில் அவர்களின் கண்டுபிடிப்பை நிலையான ஒன்றாக கொண்டுவர முயற்சி எடுத்தார்கள்.அடுத்த இரண்டு மாத கடின உழைப்பில் அவர்களின் இந்த ஒளியின் வேகத்தில் உயிரை அல்லது மனிதனை அனுப்பும் முறை தேறியிருந்தது. இந்த இடைப்பட்ட காலத்தில் பல பூனைகளை இடம் மாற்றியிருந்தார்கள்.

அவர்களின் அடுத்த இலக்கு மனிதர்களை இடம் மாற்றி பார்க்க வேண்டும். அதுக்கு இவர்களின் மற்றொரு குடுவை அதாவது ஜீனோம் தகவல்களை வைத்து உயிர்களை உருவாக்கும் குடுவை மற்ற இடங்களில் இருப்பது அவசியம்.

அதற்கு வைத்தி பெருமுயற்சி எடுத்து சில முக்கியமான இடங்களில் அந்த குடுவையை இதில் தேர்ச்சி பெற்றவர்களோடு நிறுவியிருந்தார். ஆனால் யாரும் இதை நம்பி வரவில்லை என்னதான் விளம்பரம் அதிகமாக செய்து இருந்தும்.

பல மாதங்கள் கடந்த நிலையில் ஒருவன் அதில் பயணிக்க வந்து இருந்தான். வைத்திக்கு நம்பிக்கையில்லை இதன் முறைகளை பற்றி கேட்ட பிறகு யாருமே சம்மதிப்பதில்லை என்பது அவரது கவலை.

வந்தவனிடம்.. “எங்கு போக வேண்டும் என்று சொன்னால் அங்கு கிளை இருக்கிறதா என உறுதிசெய்ய முடியும்” என்றார்.

“கோவில்பட்டிக்கு போகணும் எவவளவு நேரம் ஆகும்?”

“கிளை இருக்கு அதிகபட்சம் 4 நிமிடம். அதற்குமுன் இந்த முறை பற்றி சொல்லிவிடுகிறேன். இது முதலில் லேசர் ஒளிக்கற்றையின் மூலம் உங்களின் ஜீனோமை படிப்போம், அப்போது உங்களின் முழு உடலும் அழிந்து விடும். அதாவது லேசர் உங்களை உருக்கி ஜீனோமை படித்து அதை கோர்வையாக எங்களுக்கு கொடுக்கும். நாங்கள் வேற ஊரில் இருக்கிற மற்றொரு குடுவையின் மூலம் உங்களின் ஜீனோம் தகவலை வைத்து மீண்டும் உருவாக்குவோம்.”

“இதுதான் உங்க முறையா என்ன?”

“ஏன் உங்களுக்கு ஏற்கனவே தெரியுமா என்ன? என்றார்

"ம்ம் தெரியும் எங்க ஊர்க்காரர் கணேஷ் ஏற்கனவே இதைப்பற்றி விடை என்ற கதை எழுதியிருந்தார் படித்திருக்கிறேன். ஆனால் அப்போது அதை நம்பவில்லை அவருக்கு வேற வேலையில்லை என நினைத்தேன். ஆனால் இன்று அவரது கற்பனை உணமையாயிருக்கிறது சந்தோசம். சரி எனது பயணத்தை தொடங்கலாமா...இதை போய் கணேஷிடம் சொல்லணும்.” என்றான் வந்தவன்

வைத்திக்கு கணேஷ் யாரென்று தெரியாததால் கொஞ்சம் குழப்பத்தோடு அவனை அந்த குடுவைக்குள் நிற்க செய்துவிட்டு, கோவில்பட்டியில் உள்ள கிளைக்கு தொடர்புகொண்டு இந்த பயண விபரத்தை சொல்ல அங்கும் குடுவை தயாராய் இருக்க இயக்கத்தை ஆரம்பித்தார். அடுத்த ஒரு நிமிடத்தில் அவனது ஜீனோம் படிக்கப்பட்டு கணிணியில் வர அதை புனி கோவில்பட்டிக்கு அனுப்பினாள்.

அங்கு இருந்த குடுவையில் அவன் உருவாகிக்கொண்டு இருக்க வைத்தி அலைபேசி இணைப்பில் நிலைமையை சோதித்து கொண்டிருந்தார்.முழு உடல் சேர்ந்தாயிற்று என்பதை கேட்டவுடன் கொஞ்சம் நிம்மதி பெருமூச்சு விட்டபடி இருக்கையில் அமரும்போது....

கடைசியாக சில தவறுகள் காட்டுவதாக மறுமுனையில் உள்ளவன் சொல்ல வைத்திக்கு பயம்.

“என்ன தவறு வருவதை படி” என்றார்

“HEART -00000001-MISS-PASSWORD INCORRECT” இந்த தப்புதான் வருகின்றது என்றான்.

இதை புனியிடம் காட்டி என்ன தவறு என்று பார்க்க சொல்ல அவளும் பயத்துடன் வேகமாக பார்த்தாள், தவறு புரிந்தது.

“இதயத்தின் எல்லா செல்களும், தகவல்களும் சரியாக போய் இருக்கு ஆனால் அதுக்கு இயக்கத்துக்கான ஒரே ஒரு தகவல்மட்டும் இல்லை. ஆச்சர்யம் அது இயங்க PASSWORD கேட்குது. இந்த மாதிரி ஒரு முறையை நாம் பதியவே இல்லையே நமது முறையில்?” கேட்டாள் புனி

“பூனைக்கு எல்லாம் இதுமாதிரி கேட்கவில்லையே? என்றார் வைத்தி.

“ஆமாம் அதான் எனக்கு புரியவில்லை” என்று சொன்னபடி குழப்பமாக யோசித்து கொண்டிருந்த வைத்தியை பார்த்தாள்.

“எனக்கு புரிஞ்சுப்போச்சு அந்த PASSWORD யாருடையதுன்னு”

“யாருடையது ஏதாவது மூன்றாவது மனிதர்கள் குழப்பம் செய்கிறார்களா என்ன? என்றாள்

இல்லை அது கடவுளின் PASSWORD. அதுதான் உயிரின் ரகசியம். அது அவருக்கு மட்டும் தெரிந்த ஒன்று. அதான் அது துடிக்க மறுக்கின்றது. என்றார்

-----------x-----------x-----------x-----------

## 10. புது

கடிதத்தை படிக்கும் நீங்கள் யாராக இருந்தாலும் இதில் உள்ள விசயத்தை குறிப்பிட்ட காலம் வரை யாருக்கும் தெரியாமல் வைத்து இருக்க வேண்டும். இந்த கடிதம் உங்களைச் சேர்ந்ததற்கான காரணம், எங்கு இருந்து வந்து இருக்கிறது போன்ற காரணங்கள் கீழே படிக்கும்போது உங்களுக்கு விளங்கும்.

எதற்காக உங்களின் தகவல் கொண்ட ஒரு ஒளிக்கற்றை எங்களின் கிரகத்துக்கு வர வேண்டும், அதன் அர்த்தங்கள் ஏன் எங்களுக்கு புரிய வேண்டும்? எல்லாமே ஆச்சர்யம். நீங்கள் என்ன காரணத்திற்கு அதை அனுப்பினீர்கள் என்று எங்களால் ஓரளவு கணிக்க முடிந்தது.

நீங்களும் எங்களைப் போலவே வேற்று கிரக ஆராய்ச்சியில் ஈடுபட்டுஇருக்கலாம் அல்லது தெரியாமல் வந்து இருக்கலாம். உங்களை போலவே நாங்களும் பலஆண்டுகளாக வேற்றுக் கிரக ஆராய்ச்சியில் இருக்கிறோம். இந்த ஒளிக்கற்றை எங்களின் முயற்சிக்குக் கிடைத்த வெற்றி இல்லையென்றாலும் எதிர்பாராமல் கிடைத்த ஒரு வாய்ப்பு. அதை முழுதும் பயன்படுத்திக் கொள்வதுதான் எங்களின் எண்ணம். அதன் தொடக்கமாகத்தான் இந்த கடிதம்...

இந்த கடிதம் சேர்ந்த நேரத்தில் இருந்து சில நிமிடங்களில் எங்கள் கிரகவாசி உங்களின் இருப்பிடம் சேர்ந்து இருப்பான். அவன் வந்தது உங்களின்ஒளிகக்றறைக்கு நாங்கள் அனுப்பிய பதில் கற்றையை பின்பற்றித்தான். என்னதான் பலவருடங்கள் முயற்சித்தும் ஒளியின் வேகத்தில் பயணிக்க எங்களால் முடியவில்லை. அதுதான் அந்த சில நிமிட இடைவெளி. நீங்கள் ஒளியின் வேகத்தில் பயணிக்கும் தருணத்தில் இருந்தால் எங்களை மன்னிக்கவும்.

இப்போதைக்கு எங்களின் ஒரு ஆள் தங்கத் தேவையான இடத்தை ஏற்படுத்திக் கொடுங்கள். உங்களின் காலநிலை என்னவென்று அறியோம், அதைப் பற்றி கவலை வேண்டாம் எங்கள் ஆள் பார்த்துக் கொள்வான். அவனுக்கு தேவையான உதவிகளை மட்டும் செய்தால் போதும்.

அவன் உங்களின் கிரகத்தில் நாங்கள் வாழ்வதற்கான சாத்தியக்கூறுகளை ஆராய்ந்து எங்களுக்கு அனுப்புவான், பின்னர் ஒரு குழு வந்து இறுதிகட்ட ஆய்வை மேற்கொள்ளும். பின்னர் எங்களின் விஜயம் உங்களின் கிரகத்துக்கு எப்போது எப்படி என்று நாங்கள் தீர்மானிப்போம்.

எங்களின் வருகை எந்த விதத்திலும் உங்களுக்கு தொந்தரவாக இருக்காது. சொன்னதுபோல எங்களுக்கு கிடைத்த இந்த அரிய வாய்ப்பை நமக்குள் பலப்பரிட்சைசெய்து தீர்த்துக்கொள்ள விரும்பவில்லை. ஏற்கனவே இந்த ஆராய்ச்சியில் நிறைய இழந்து இருக்கிறோம். நாங்கள் ஆய்வுக்கு அனுப்பிய சிலர் இதுவரை எங்கள் கிரகத்துக்கு திரும்பியே வரவில்லை. அவர்கள் வேற்று கிரகத்தை அடைந்து அங்கு உள்ளவர்களால் பாதிப்படைந்தார்களா? இல்லை பயணத்தில் பிரச்சினையா? எதுவும் எங்களுக்கு தெரியாமலேயே அவர்களை இழந்து இருக்கிறோம்.

ஆகவே எங்களுக்கு இதில் முழுவதும் ஒத்துழைக்க வேண்டுகிறோம். திரும்பவும் உறுதியளிக்கிறோம், எங்களால் உங்களுக்கோ, கிரகத்துக்கோ எந்தவித தீமையும் வராது. அனேகமாக எங்கள் ஆள் வந்து இருப்பான், நம்பிக்கையுடன்...



இதைப் படித்துக் கொண்டு இருக்கும்போதே என் பின்னால் ஒரு வித்தியாசமான சத்தத்துடன் அந்த உருவம் வந்தது. உட்கார்ந்து இருந்த இடத்தில் இருந்து வேகமாய் எழுந்து பயந்து நகர... அது என்னை கவனிக்காமல் தனது மேல் இருந்த titanium போன்ற தகடுகளை தனது நான்கு கைகளால் கழட்டிகொண்டு இருந்தது..

அதன் இரு கைகள் நம்மைப் போல் நிலையாக இருக்க மற்ற இரு கைகள் அதன் இடுப்புப் பகுதியில் இருந்து மேலும் கீழும் நகரும் படி இருந்தது. இன்னும் அது தனது வேலையில் லயித்து இருக்க, சொல்ல முடியாத பயம் எனக்கு. என்ன செய்வதென்றே தெரியாத நிலையில் நான்...

தனியாக சில முயற்சிகள் செய்து பார்க்கலாம் என்று சில தகவல்கள் கொண்ட ஒளிக்கற்றைகளை விண்வெளியில் பரவவிட்டேன். இந்த நிலை வருமென்று நினைக்கவில்லை. நீண்ட நாட்களாக நம் மனித இனம் முயற்சிப்பதுதான். இதில் நான் கொஞ்சம் அனுப்பிய ஒளிக்கற்றையில் தகவல்களின் அர்த்தத்தை புரிந்து கொள்ளும் தன்மையை வேறுமாதிரி அமைத்து இருந்தேன். அதுதான் இந்த வேற்று கிரகவாசிகள் எளிதாகப் புரிந்துகொண்டு அதே முறையில் தகவல் அனுப்பியதோடு அவர்களில் ஒருத்தனையும் அனுப்பியிருந்தார்கள்..

தனது உடலில் இருந்த தகடுகள் போன்றவற்றை முழுதும் அகற்றியிருந்தது. உடலில் நமக்கு இருக்கும் இணைப்புகள் போல் இல்லை. எல்லாம் ஒரே கட்டமைப்பில்இருந்தது. ஆனால் தேவையான இடத்தில் வளைந்து கொடுக்கும் அமைப்பு. அதை நடக்கும்போது பார்த்தேன். கால் ஒரு குறிப்பட்ட இடத்தில மட்டும் வளைந்து கொடுத்தது. அங்கு இணைப்பு இல்லை.

முடி இல்லை, எல்லாம் மலுக்கென்று இருந்தது. மூக்கு இல்லை. வாய் இருந்தது. உயரம் நம்மைவிட கொஞ்சம் அதிகம். காது வெறும் ஓட்டையாக இருந்தது.கண் ஒரு நிரந்தரமான விலகாத திரையால் மூடப்பட்டு இருக்க உள்ளே ஒரே கலரில் உருண்டையாக இருந்தது. தலை நம்மைப் போல் திரும்பியது. ஆனால் இணைப்புஇருப்பதாக தெரியவில்லை. மற்ற அமைப்புகள் நம்மை ஒத்திருந்தன.

பயத்தில் இருந்த நான் எனது தாய்மொழியிலேயே முதல் கேள்வியை கேட்டுவைத்தேன்..

"நீங்கள் யார்?"

"எங்களைத்தான் நீங்கள் ஏற்கனவே தெரிந்து வைத்து இருக்கின்றீர்களே" என்றது

எனக்கு ஆச்சர்யம் எப்படி இது தமிழ் பேசுகின்றது...கேட்டேவிட்டேன்..

"உனக்கு எப்படி எனது மொழி தெரியும்?"

"உனது மொழியென்று இல்லை...எனக்கு யாருடனும் தகவல் பரிமாற்றம் செய்யமுடியும்"

"எப்படி?" என்றேன்

" என்னால் பரிமாறிக் கொள்பவரின் மூளை எந்த மாதிரியான தகவலை கிரகித்து கொள்ளும் என்பதை உணர்ந்து கொள்ள முடியும், நாங்கள் எங்களுக்கான மொழியில் பேசினாலே போதும் எங்களுக்குள் இருக்கும் ஒரு அமைப்பு தானாகவே எதிரில்இருப்பவரின் மூளைக்கு ஏற்றவாறு மொழிபெயர்த்து கொடுக்கும். இந்த அமைப்புஎங்களில் எல்லோர்க்கும் இல்லை. யார் வேற்று கிரக ஆராய்ச்சிக்கு செல்கிறார்களோ அவர்களுக்கு மட்டும்தான்"

"சரி ஏற்கனவே எங்களை அறிந்து இருக்கீறிர்கள் என்று சொன்னாயே அது ஏன்?"

"வருகின்ற வழியில் எங்களை போல் உருவம் கொண்ட சில சிற்பங்களை, படங்களை பார்த்தேன். அதுவும் சில குறிப்பிட்ட இடங்களில் மட்டும் எங்களின் உருவத்தைஉங்களின் உருவத்தோடு ஒத்துபோவதுபோல கொஞ்சம் மாற்றியிருக்கிறீர்கள்........அந்த இடங்கள் கூட மிக உயரமான, கோபுரங்கள் கொண்டவையாக இருக்க, மக்கள் கூட்டம் எங்களவர்களை என்னமோ செய்துவிட்டு செல்கிறார்கள். அவர்கள் என்னைபோலவே வேற்று கிரக ஆராய்ச்சிக்கு வந்தவர்கள். அவர்களை நீங்கள் என்ன செய்தீர்கள்? ஏன் திருப்பி அனுப்பவில்லை? அனேகமாக அவர்களின் ஆயுள் காலம் முடிந்து இருக்க வேண்டும். பின்னர் ஏன் அவர்களை சிற்பமாக, ஓவியமாக வைத்து இருக்கிறிர்கள்?" என்று அது கேட்டுகொண்டு இருக்க எனக்கு கொஞ்சம் உண்மை புரிய ஆரம்பித்தது. அதே பயத்தில் என்னையறியாமல் சுவற்றோடு சரிந்து உட்கார்ந்து இருந்தேன். அப்படியென்றால் வந்து இருப்பது.....

"நாங்கள் கடவுள் என்று நினைத்துகொண்டு இருப்பது உங்கள் கிரக வாசிகளா?" என்றேன் இன்னும் ஆச்சர்யம் விலகாமல்

"எங்கள் இனத்தவருக்கு நீங்கள் வைத்த பெயர் கடவுளா என்ன?"

"இல்லை கடவுள் என்பவர் வேறு..இந்த பிரபஞ்சத்தை அதில் உள்ள எல்லாத்தையும் ஏன் உங்களையும் படைத்தவர் என மனிதர்களால் நம்பபடுபவர்"

"என்ன இந்த பிரபஞ்சம் படைக்கபட்டாதா? அதுவும் ஒருவரால்?" அவனது குரலில் கொஞ்சம் ஏற்ற இறக்கம் இருந்தது. ஒருவேளை கொஞ்சம் கோபம அலல்து அதிர்ச்சியாக இருந்திருக்க வேண்டும்.

"அப்படித்தான் நாங்கள் நம்புகிறோம். சரி உங்களைப் பொறுத்தவரை பிரபஞ்சத்தின் படைப்பு என்பது எந்த விதமம்" என்றேன்

"உங்களதை போல ஒருவரால் படைக்கப்ட்டது என்பதுக்கு இடமே இல்லை....எங்களது பிரபஞ்சத்தின் ரகசியத்தை அறியும் முறை உங்களின் முறையைவிட வேறாக இருக்கலாம் சொன்னால் உனக்கு புரியுமா?"

"எனக்கு புரியுற மாதிரி சொல்" என்றேன் ஆர்வமாக



"எல்லாம் தானாக நடந்த தற்செயல், அதை நாம் விதிகொண்டு விளக்க முடியும். இப்போது உங்களின் அனுமானம்படி அணுக்கள்தான் அதிக பட்ச கண்டுபிடிப்பு.. எங்கள் முறையில் கொஞ்சம் வேறு.... அந்த அணுக்களின் நிறையை, தன்மையை மாற்றி பார்த்தோம் அது மற்றொரு மூலகூறுவை உருவாக்கியது, அப்படியானால் இந்த மாதிரி தற்செயலாக அணுக்கள் வேறமாதிரி இணைந்து இருந்தால் அதனால் உருவாக்கப்படும் பிரபஞ்சம் இப்போது இருக்கிற மாதிரி இல்லாமல் வேறமாதிரி இருக்கும்"

"ஒன்றும் புரியவில்லை" என்றேன்

"அது கொஞ்சநேரம் யோசித்தது... எலக்ட்ரான் ஒன்றின் நிறையை மாற்றி அதுக்கு ஏற்றாற்போல் நியூட்ரோன், புரோட்டானின் நிறையும் மாற்றியமைத்து ஒரு புதிய அணுவை உருவாக்குவது. அப்படி உருவாகிவிட்டால் இதே மாதிரி அணுக்கள் நாம் செயற்கையாக இணைப்பதற்கு பதில் அதுவாகவே தானா எங்கேயோ ஒரு மூலையில் சேர வாய்ப்பு இருப்பதாக அர்த்தம்தானே"

இப்போது எனக்கு தெளிவாக புரிந்து இருந்தது.. நமது பிரபஞ்சத்தை போல்இல்லாமல் வெளியில் வேறு அணுத் தொகுதிகளை கொண்டு உருவான சில பிரபஞ்சங்கள்இருக்கலாம்... அப்படி இருந்தால் அங்கேயும் நமது பிரபஞ்சம் போல் கோள்களஎல்லாம் இருப்பது சாத்தியமே.. நமது பிரபஞ்சமும் இப்படித்தான் தோன்றியிருக்க வேண்டும். நாம்தான் கடவுள் என்று வேற்றுகிரக வாசிகளை வைத்து குழப்பம் செய்து இருக்கிறோம். சூரிய குடும்பம் பிறகு கோள்கள்...தண்ணீர்..அதில் முதல் உயிரி..அடுத்து ஒரு மீன் தண்ணீரை விட்டு வெளியில் போய் வெளிகாற்றை சுவாசிக்க பழகி..ஊர்ந்து சென்று..கால்கள வந்து..அப்படியே பரிணாமங்கள் தொடர்ந்து .....இப்போது இதை எழுதி படித்துகொண்டு இருக்கிறது..நான் இதை யோசித்து கொண்டு இருக்கும்போதே அந்த உருவம் சற்றுமுன் கழட்டி போட்ட டைடானியம் தகடுபோல இருந்தவற்றை எடுத்து பொருத்தும் வேலையில்

இருந்தது..

"என்ன ஆச்சு?" என்றேன்

"நான் வந்த வேலை முடிஞ்சது போகிறேன்"

"இங்கு நீங்கள் தங்கி ஆராய்ச்சி செய்யப் போவாதாக கடிதத்தில் இருந்தது?" என்றேன்

"அதான் எங்கள் இனத்தவர்கள் இங்கு வாழ்ந்திருப்பதற்கான சாத்தியம் இருக்கிறதே! இது ஒன்று போதும்"

"ம்! சரி அடுத்த நடவடிக்கை என்ன?"

"எங்களில் சிலர் வருவார்கள்...ஏற்கனவே இங்கு வந்த எங்களவர்கள் என்ன ஆனார்கள்? உங்களை எப்படி சாமாளிக்கலாம்? போன்ற விசயங்களை ஆராய்வார்கள்" என்றது

"எனக்கு சில சந்தேகங்கள் உங்கள் கிரகத்தை பற்றி" என்றேன்

"என்ன ..அதான் நாங்கள் இங்கு வரப் போகிறோமே அப்போது தெரிந்து கொள்ளலாம்" என்றது.

"இதன் மூலம் இங்கு பார்த்தது உங்கள் இனத்தவர்தானா என்பதை என்னால் உறுதியாக சொல்ல முடியும்" என்றேன்

"சரி கேள்"

"உங்கள் கிரகத்தின் கால அளவுகள் என்ன?"

"அடிப்படையில் உங்கள் நட்சத்திரத்தை விட பல மடங்கு பெரியதுஎங்களது..அதோடு எங்களது கோள் அதை சுற்றிவரும் நேரமும் அதிகம்..பயணதூரமும் மிக அதிகம்..ஒரு முறை முழுவதும் சுற்றிவர உங்களது மணியளவில் 8760000 மணிகள், நாட்களில் 365000 நாட்கள் ஆகும். எங்களின் கணக்குபடி இது குறைந்த அளவுதான். ஆனால் உங்களுக்கு அதிகமாக இருக்கும்" என்றது.

"ஆமாம் ..இதை உங்களவர்களும் ஏற்கனவே சொல்லியிருக்கிறார்கள்" என்றேன் கொஞ்சம் ஆச்சர்யமாக.

"அதான் நான் ஏற்க்கனவே சொன்னானே அவர்கள் எங்களவர்கள்தான் என்று"

"ம்ம் ஆமாம். சரி, உங்களின் அடுத்த பயணம் எப்போது?"

"இது எங்களுக்கு மிக சந்தோஷமான விசயம் எனவே காலதாமதம் இருக்காது. விரைவில் வருவோம்" என்று சொன்னபடி மேலே எம்பி பறக்க வெளியில் சென்றது..

சுற்றுமுற்றும் பார்த்த படி தனது நகரும் கைகளை ஒருவாறு அசைக்க ஒருவித ஸ்ஸ்ஸ்ஸ் என்ற சத்தம் கேட்க கண்ணில் இருந்து மறைந்தது. இன்னும் இதுவரைஎன்ன நடந்தது என்பதை புரியாத நிலையில் இருந்தேன். நடப்பது எல்லாம் உணமைதான்என்பதை அறிந்த போது ..இந்த பூமி மற்றொரு புதிய அவதாரத்துக்கு தயாராக இருக்கிறது என்பதை

உணர்ந்து இருந்தேன்....அவர்களின் வருகைக்கு பின் நடப்பதுஎன் மனதில் ஓடதொடங்கி இருந்தது......

-----------x-----------x-----------x-----------

## 11. ஒரே வழி

**கடவுளை காண ஒரே வழி**
**(நம்பகமான அறிவியல் முறையில்)**

இந்தப் பெயர்ப்பலகையைப் போட்டு பல நாட்களாக ஆகியும் இதுவரை ஒருத்தரும் புத்தியைத் தேடி வரவில்லை..... நம்பிக்கையோடு இருந்தார் தனது இந்த புதியமுறை கண்டிப்பாக ஒரு நாள் வெளியில் புகழப்படும் என்பதில்.

புத்தி வயதானவர், தனது வாழ்நாளை விண்ணியல் ஆராய்ச்சிக்கு அர்ப்பணித்து எந்த ஒரு அங்கீகாரமும் கிடைக்காததால் தனியாக ஒரு முயற்சியை மேற்கொண்டு அது அவருக்கு திருப்தியைத் தர ஒரு கட்டடத்தில் இந்த பெயர்ப்பலகையோடு உட்கார்ந்து இருக்கிறார்.

இதுவரை சிலர் வந்து எப்படி என்று மட்டும் கேட்டுவிட்டு திரும்பியிருக்கிறார்கள். அவர் முழுவதும் சொல்லி முடிக்கும் போது கேட்பவர் அங்கு இருந்ததில்லை. இதனால் ஒருபோதும் அவர் வருத்தப்படமாட்டார்.

பல "...ந்தாக்கள்" கதவை, ஜன்னலை திறக்கச் சொல்லி கூப்பிட்டால் போய் ஏமாறுவார்கள், ஆனால் அறிவியலை நம்பமாட்டார்கள்.... எப்படி இருந்தாலும் எனது இந்த முறைதான் இறுதியானது. எத்தனை "....ந்தாக்கள்" எதை திறந்தாலும் கடவுளை காண முடியாது. அது நான் சொல்லும்வழியிலேயே சாத்தியம் என்பது அவரது அசையாத நம்பிக்கை..

அந்த இருவர் உள்ளே நுழைந்து யாரும் இருக்கிறார்களா? என்று தேடிக்கொண்டு இருக்கும்போது சதுரமாக கொஞ்சம் முனை ஊசியாக இருந்த அந்த பெட்டி போன்றதில் இருந்து புத்தி வெளியில் எட்டிப்பார்த்தார்.... அந்த இருவரில் ஒருவன்.

"வெளியில் பெயர்ப்பலகை பார்த்தோம். இங்கு....."

"ஆமாம் உங்களுக்கு விருப்பமா?"

"ம்ம் அதான் வந்து இருக்கிறோம்"

"இருங்கள் இந்த கலத்தில் கொஞ்சம் வேலை... வந்துவிடுகிறேன்" என்று சொல்லி புத்தி தனது வேலையை தொடர அந்த இருவரும் அந்த கலத்தை பார்த்தபடி அமர்ந்தனர்.

"சொல்லுங்க உங்கள் இருவரில் யாருக்கு விருப்பம்?"

"ஏன் இருவரும் போக முடியாதா?"

"ஏன் இல்லை போகலாம் நல்லது"

"இருவருக்குமே விருப்பம்தான்"

"சரி எனது முறை பற்றி ஏதாவது கேள்விப்பட்டு இருக்கிறீர்களா?"

"இல்லை"

"அறிவியல் அறிவு ஏதும் இருக்கா?"

“ம்ம் கொஞ்சம்”

“சரி எனது முறையை விளக்கமாக சொல்கிறேன் அப்புறம் உங்களின் முடிவை சொல்லுங்கள்”

“சரி, இதுக்கு ஏதும் பணம் கொடுக்கணுமா?” இருவரில் ஒருவன் கேட்டான்.

“உங்கள் விருப்பம்” என்றார் புத்தி.

“சரி சொல்லுங்க உங்களின் முறையை”

“கடவுள்தான் இந்த பிரபஞ்சத்தை படைத்தார் என்பதை நீங்கள் நம்புகின்றீர்களா?” கேட்டார் புத்தி

“கண்டிப்பா அதான் வந்தோம்”

“ம்ம் நல்லது. பிரபஞ்சம் வெடிப்பில் 13.7 billion வருடங்கள் முன்னாடி உருவாகி காலத்தோடு விரிவடைந்து இந்த நிலையில் இப்ப இருக்கு. அப்படி பிரபஞ்சம் விரிவடைந்தால் ஒரு புள்ளியில் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் அது தொடங்கியிருக்க வேண்டும் அல்லது தொடக்கப்பட்டு இருக்க வேண்டும். அப்படி தொடக்கப்பட்டு இருந்தால் தொடங்கியவர்தான் கடவுள். பிரபஞ்சம் விரிவடையும் போது நேரம் அதோடு சேர்ந்து நகரும் இங்கு நான் செய்ய போவது முன்னோக்கி நகரும் காலத்தை பின்னோக்கி நகரச்செய்ய போறேன். காலம் பின்னோக்கி போனால் அந்த நேரத்தில் நடந்ததை உங்களால் உணர முடியும். அப்படியே 13.7 பில்லியன் வருடங்கள் பின்னாடி போனால் இந்த பிரபஞ்சத்தை உருவாகும் அல்லது உருவாக்கிய விதத்தை பார்க்க முடியும்”



“அப்ப நீங்க சொல்றது கால இயந்திரம் மாதிரியா என்ன?”

“இல்லை கால இயந்திரம் எல்லாம் கொஞ்சம் கற்பனையான விஷயம். இதற்காக நான் ஒரு கலம் அமைத்து இருக்கேன்..” என்று அங்கு இருந்த அந்த சதுரவடிவ ஒன்றை காட்டினார்..

"இது இங்கு இருந்து கொஞ்ச தூரம் வரை சாதாரண எரிபொருளில் பயணிக்கும் அடுத்து வெளியில் உள்ள hydrogen அல்லது helium போன்ற வாயுக்களை கிரகித்து தனது வேலையை செய்யும்..."

"இதில் 13.7 billion வருடங்களை பயணிப்பதற்குள் எங்களுக்கு ஏதும் ஆகாதா?"

"இல்லை இந்த கலத்தின் சிறப்பே ஒளியின் வேகத்தை விட 35% வேகமாக செல்லும் என்பதுதான்"

"சரி போகிற போக்கில் விண்வெளியில் இருக்கிற நட்சத்திரம், கருந்துளைகள், மீது மோதி ஏதாவது ஆனால்?"

"வாய்ப்பே இல்லை இதில் அதுக்கான சென்சார்கள் பொறுத்தி இருக்கிறேன். குறிப்பிட்ட தொலைவில் ஏதாவது இருந்தாலே இது, தான் போகும் திசையை மாற்றிவிடும். அதோடு ஏதாவது நட்சத்திரத்தின் அருகில் சென்றால் அதிக வெப்பம் ஏற்பட்டு அதுக்குரிய சென்சார்கள் இதன் திசையை அதைவிட்டு மாற்றும்.."

"இதுக்கு முன்னாடி சோதித்து பார்த்து இருக்கிறீர்களா? ஏதாவது ஆச்சுன்னா எங்களுக்கு?"

"நீங்கள் இங்கு இருந்து எதை சாதிக்கப் போகிறீர்கள்?" என்றார் கொஞ்சம் கோபமாக...... இருவரும் ஒன்றும் பேசாமல் அமைதியாயினர்.

"என்ன போக விருப்பமா?"

"ம்ம் போகிறோம்"

"சரி நான் சரியாக 13.7 billion வருடங்கள் மட்டும் பின்னோக்கி போகுமாறு வைக்க போவதில்லை. ஒருவேளை இந்த நேரத்தில் பிரபஞ்சம் உருவாக தொடங்கியிருந்திருக்கலாம் அதனால் இதை விட சில வருடங்கள் பின்னாடியே வைக்கிறேன் உங்களுக்கு சரியாக இருக்கும். அப்படியே பின்னாடியே போயிட்டாலும் பிரபஞ்சதை உருவாக்கும் முன்னாடி கடவுள் என்ன செஞ்சிகிட்டு இருந்தார்னு பார்த்துட்டு வாங்க சரியா"

"சரி எப்போ போகப்போகிறோம்?"

"இன்னும் எனக்கு கலத்தில் மேம்பாட்டு வேலைகள் இருக்கு இரண்டு நாள் கழிச்சு வாங்க. ஒரு நாள் கலத்தை இயக்குவதற்க்கு பயிற்சி முடிந்த பிறகு அடுத்த நாள் உங்களின் பயணம் தொடரும்.."

* * * * *

இரண்டு நாள் பயிற்சியில் கலத்தை பற்றிய எல்லா விசயமும் விளக்கப்பட்டது. ஏதாவது ஆபத்து என்றால் எப்படி திரும்புவது போன்றவை தெளிவாக்கபட்டது..

கிளம்பினார்கள். சத்தம் ஒன்றும் பெரியதாக இல்லை. சுற்றி ஒரே புகை மண்டலமாக மாறி கொஞ்ச நேரத்தில் மறைந்தது.... கிளம்பி மேலேபோய் கண்ணுக்கு மறையும் வரை அதையே பார்த்து கொண்டு இருந்த புத்தி ஒரு பெருமூச்சோடு உள்ளே போனார்.

கலத்தில் ...

“உனக்கு நம்பிக்கை இருக்கா கடவுளை பார்ப்போம்னு?” என்றான் ஒருவன்

“கண்டிப்பா கடவுள் இருந்தால் இந்த முறையில் சாத்தியம்தான்”

“கடவுளை பார்த்தால் என்ன செய்ய?”

“அதை பார்த்தபிறகு யோசிப்போம் இப்போது கலத்தை இயக்குவதில் கவனம் வை’

கலம் வேகமாக பயணித்தது.... அது பயணிக்கும் வேகம் தூரத்திற்கு ஏற்றவாறு காலம் மாறுவது திரையில் தெரிந்தது...

10.3 billion

8.7 billion

5.3 billion

3.1 billion

target reached

இருவருக்குள் மௌனம்..வெளியில் வெளிச்சம் இல்லை..இன்னும் big bang நடந்து இருக்கவில்லை என்பதால் நட்சத்திரம் ஏதும் இல்லை..ஒரே இருட்டு.... அங்கு இருந்த hydrogen helium வாயுக்களை கலம் சுவாசித்து கொண்டு இருந்தது...

இருவரும் தேடினார்கள் கடவுள் எங்கே இருக்கக் கூடும் என்று....அவர்களுக்கு தெரியும் இன்னும் நமது பிரபஞ்சம் உருவாகவில்லை..இருப்பது வெறும் வெற்றிடம் மட்டும்தான் என்று...

கலத்தில் இருந்த விளக்கின் வெளிச்சம் படும் தூரம் வரை தேடினார்கள்...கொஞ்ச தூரம் தள்ளி போய் தேடினார்கள்...

(கதையின் முடிவு சரியாக புரியாதவர்களுக்கு..புத்தியின் முகவரி கிடக்கும்...ஒரு முறை விஜயம் செய்ய...)

## 12. என்னவள்

அவள் மயங்கி இருந்தாள்....ஆய்வுகூடத்தில் கிடத்தியிருந்தேன்...சுத்தமாக விருப்பமில்லைதான்.. அதிகம் விரும்பும் அவளை மயக்கமாக்கி இந்த நிலையில் வைத்து இருப்பதற்க்கு...எல்லாம் அவளின் மீது இருக்கும் அதிக காதலின் தாக்கம்..சரியாக சொன்னால் அவளை நான் சுற்ற ஆரம்பித்து ஓராண்டுக்கு மேல் ஆகின்றது...இந்த நிலையில்தான் இரண்டு நாளைக்கு முன்....அவளோடு கிடைத்த தனிமையில்..

"ஏதாவது சொல்லலாமே?"

"என்ன சொல்லணும்?" என்றாள்

"இதைத்தான் நான் கேட்கும்போதேல்லாம் சொல்றே. நான் எதுக்கு உன் பின்னாடி சுத்துகிறேன்னு உனக்கு புரியலையா? இல்லை புரியாத மாதிரி நடிக்கிறியா? பிடிக்கலைன்னா சொல்ல வேண்டியதுதானே இப்படியே மௌனமாக இருந்தா என்ன அர்த்தம்?"

"இவ்வளவு நாள் பின்னாடி சுத்தி பார்த்ததில் என் செய்கையில் உனக்கு ஒன்றும் புரியலையா என்ன?"

"இல்லை...அதானே கேட்கிறேன் சொல்லேன்?"

"இப்போதைக்கு எதுவும் சொல்வதாக இல்லை...நீயே புரிஞ்சிக்கோ" என்று சொல்லிவிட்டு நகர்ந்திருந்தாள்.

அப்படி ஒன்றும் செய்கையினால் புரியும்படி சொன்னதாக நினைவில்லை, அப்படியே இருந்தாலும் நான் அதை சரியாக புரிந்து கொண்டு இருக்கவில்லை அதுதான் பிரச்சினை. கேட்டாலும் மறுக்கிறாள்...அவளது செய்கைகள் என் காதலை மறுப்பதாக இருந்ததில்லை..தினமும் பலமுறை பார்த்துகொள்வோம், சிரித்தால் ஏன் இவன் சிரிக்கிறான் என்பது சில நொடிகள் பார்த்துவிட்டு செல்வாள். கிடைத்த தனிமையில் பேசினால் அமைதியாக பதில் சொல்வாள் அதில் ஒன்றும் புரியும்படி அர்த்தம் இருக்காது..மேலே சொன்னது போல்..

மனது முழுவதும் அவளின் நினைவு இருந்ததாலோ என்னவோ ஒவ்வொரு பதில் சொல்லாத நிராகரிப்பும் அவளின் மீது இருக்கும் காதலை அதிகமாக்கியதுதான் உண்மை...சில நாட்கள் வரை கேட்க தயங்கிய நான் இப்போதெல்லாம் நேரடியாகவே கேட்டு விடுகிறேன். இருந்தும் ஆமாம் அல்லது மறுத்தோ சொல்லமாட்டேன்கிறாள்...அதிக வலிகள் தரும் விசயம் இதுதான்...



ஒரு முடிவுக்கு வந்தேன்...பொறுமையில்லை...இவள் என்னதான் நினைத்துகொண்டு இருக்கிறாள் என்பதை எப்படியாவது தெரிந்து கொள்ளவேண்டும்...அவளின் அனுமதியோடு நடப்பது சாத்தியமில்லை...இதுக்கு நான் படித்த அறிவியல் கைகொடுக்கும் நான் செய்யப் போவது அவளது மூளையில் இருந்து அவளுக்கு தெரியாமலே நினைவுப் பகுதியில் இருக்கும் தகவலை திருடப் போகிறேன்...அதாவது சில நாள்களுக்குள் அவள் என்ன நினைத்து இருந்தாள், எதை சேகரித்து வைத்து இருக்கிறாள் என்பதை அறிவதின் மூலம் என்னைப் பற்றி அவள் என்ன நினைத்து இருக்கிறாள் என்பதையும் அறியமுடியும்..அதோடு கடந்த இரண்டு தினங்களில் அவளை காதலுக்காக நிறைய வற்புறுத்தி இருக்கிறேன்...

பெரியதாக அவளை கஷ்டப்படுத்த போவதில்லை, மனித மூளையில் நிகழ்வுகளை அல்லது பல உணரும் விசயங்களை சேமிக்கும் பகுதிகள் இரண்டு பகுதிகளாக இருக்கும். ஒன்று elaborate encoding, மற்றொன்று shallow encoding. இதில் elaborate encoding நீண்ட கால நினைவுகளை சேமிக்கும் முறை. இதில் பதிந்து விட்டால் கூடிய சீக்கிரம் மறக்காது..எல்லாம் ஆழமாக பதியபட்டவைகள்..பல வித்தைகள் செய்து காதலியிடம் வாங்கிய முதல் முத்தம், அல்லது காதலை சொல்லபோய் அவள் செருப்பு காட்டியது.. இந்த மாதிரி முக்கியமான நிகழ்வுகள் அதில் இருக்கும். shallow encoding என்பது தற்காலிக நினவுகளை சேமிக்கும் முறை...இதில் அன்றாடம் நிகழும் சில சிறிய நினைவுகள் மட்டுமே கையாளும் ஒன்று..கணினியில் இருக்கும் RAM போன்று சொல்லலாம்...காலையில் பார்த்த முடி நீளமான பெண்ணை பற்றி அன்றைய மாலையில் மட்டும் நண்பனிடம் சிலாகிப்பது, அம்மாவிடம் வாங்கும் திட்டுகளை மறந்து மறுநாளும் அதே தவறை செய்வது, பேருந்தில் வாங்கிய பயணச்சீட்டின் விவரம் இது போன்ற அன்றாட வேலைகளுக்கு உதவுவது,.இவை ஆழமாக பதிந்து இருக்காது..

நான் செய்ய போவது முதலில் இந்த shallow encoding பதிய பட்ட தகவல்களை வெளிய எடுத்து அதில் ராசாயன மாற்றங்களாக சேமித்து வைக்கபட்டு

இருப்பவைகளை புரிந்துகொள்வதுதான்...இதன் மூலம் அவள் என்னைப்பற்றி என்ன நினைத்து இருக்கிறாள் என்பதை தெரிந்து கொள்ள முடியும்..அப்படி இல்லையென்றால் elaborate encoding-ல் தேட வேண்டும்...shallow encoding-ல் தற்காலிமாக பதியும் எண்ணங்கள் ஆனது neuron செல்களுக்கு இடையே இருக்கும் கால்சியம் மற்றும் அமினோ அமிலங்கள் கலந்த கலவைகளால் கொஞ்சம் நேரம் மட்டும் நிறுத்திவைக்கப்படும்,, பதியப்படும் தகவல்களுக்கு ஏற்ப அது களைந்து நம்மை மறக்க செய்யும்..அதே போலத்தான் elaborate encoding இதில் கூடுதலாக சில ப்ரோடீன்கள் உள்ளே செல்லும் தகவல்களை அதிக நேரம் நிறுத்தி வைக்கும்..இவளை பொறுத்தவரையில் shallow encoding உள்ளவற்றை படித்தாலே போதுமானது.

அவளுக்கு நான் கொடுத்து இருந்தது சாதாரண மயக்கம் தரும் சோடியம் பென்தால் மருந்துதான்..வேகமாக முடிக்க வேண்டும்..தலைக்கவசம் போல் இருந்த அந்த கருவியை அவளது தலையில் பொருத்தினேன்..மூளையில் ஏற்படும் அல்லது ஏற்பட்ட மின்சார அதிர்வுகளை கண்டறிய நான் கண்டு பிடித்தது..மூளையில் ஏற்ப்படும் ரசயான மாற்றத்தையும் படித்து சொல்லும்...அப்படிப் பெற்ற தகவலை கணினியில் சேகரித்து பின் அதை சாதரணமாக புரிந்துகொள்ளும் மொழிக்கு மாற்றினேன்..சரியாக வந்தது. அவை வரிசையாக..

லில்லி பூனை என்னை கன்னத்தில் புரண்டாமல் இருந்திருந்தால் அப்பா அதை தூக்கிக் கொஞ்ச தடைபோட்டு இருக்கமாட்டார்...

ச்சே என்ன அருமையாக கவிதை எழுத தெரிந்தாலும் அதை வீட்டில் வைக்க முடியாமல் கிழித்துதான் போட வேண்டியது இருக்கு..

கணேஷ் என்னை எப்படி காதலிக்கிறான் அவனிடம் நானும் உண்மையை சொல்லியிருக்கலாம்..எவ்வளவு நாளைக்குததான் இப்படியே இருப்பது....அவன் மனசு மாறிவிட்டால்?

நான் நல்ல பெண்தானே இருந்தும் வீட்டில் எதுக்கு இவ்வளவு கண்டிப்பு...இது இல்லாமல் இருந்தால் எவ்வளவு நல்லா இருக்கும்..

வீட்டில் உள்ள நிலைமைக்காகத்தான் என் காதலை இவ்வளவு நாள் சொல்லவில்லை என்பதை கணேஷிடம் சொல்லும்போது அதை அவன் நம்புவானா?..அய்யோ வருகிறானே..என்னை நெருங்கி வந்துட்டான்..கையில் ஊசி வைத்து இருக்கிறான்...என் கையில்....குத்தி விட்....

அதற்குபிறகு நடந்ததை கதையின் முதல் பத்தியில் இருந்து படிக்கவும்

((இதில் மூளை தகவலை சேமித்து வைக்கும் முறை சரியானது. அதை எடுப்பது கற்பனை...)

-----------x-----------x-----------x-----------

## 13. மனசு எங்கே

அந்த பெண் சொன்னதை கேட்டதில் இருந்து இருவரும் கொஞ்சம் குழப்பத்தில் இருந்தார்கள்..இது எப்படி சாத்தியம்? ஒருவேளை அந்த பெண் பொய் சொல்கின்றாளா? என்ற சந்தேகம் இருவருக்கும்...

தனியாக உட்கார்ந்து ..அழகாய் அமைதியாக எதையோ யோசித்துக்கொண்டு இருந்தாள்..

வைத்தி அவள் சொன்னதை ஒருமுறை உறுதி படுத்திக்கொள்ளும் எண்ணத்தில் அவளிடத்தில் ..

"நீ சொல்வது நம்புற மாதிரி இல்லையே? சரியாத்தான் சொல்றியா?"

"ஆமாம்... எனக்கு இந்த பிரச்சினை இல்லையென்றால் எதுக்கு உங்களை தேடிவரப் போகிறேன்? என்றாள்

"உனக்கு என்ன நடந்தது? இந்த பிரச்சினை எத்தனை நாள்களாக இருக்கு? என்னென்ன பாதிப்புகள்னு கொஞ்சம் தெளிவாக சொல்லேன்?" கேட்டார்

"என்ன நடந்தது தெரியல.. சில நாள்களாகத்தான் இருக்கு....ஏதோ மனசே இல்லாத மாதிரி இருக்கும்..ஒரே வெறுமையாய்...எல்லாமே இருண்ட மாதிரி..என்னுள் எந்த எண்ணமும் ஓடாது...என்னால் எதையும் யோசிக்கவோ? சிந்திக்கவோ முடியாது...என் மனசே என்கிட்டே இல்லாமல் என்னைவிட்டு எங்கோ போய்விட்ட மாதிரி ஒரு நிலை..அடிக்கடி அவதிபடுகிறேன்..அதான் என் மனசு என்னிடம் இருக்கா இல்லையான்னு உங்களின் உதவியால் சோதித்து பார்க்கலாம்னு வந்தேன்'என்றாள்

வைத்திக்கு மீண்டும் அதே குழப்பம்....மனசு எங்கே போகும்? தன்னுள் இல்லை என்கிறாளே?...அப்போதுதான் அவருக்கு சில நாள்களுக்கு முன் அவர் மனிதனுள் மனசு எங்கே இருக்கின்றது என்பதை கண்டுபிடிக்க எடுத்துக் கொண்ட முயற்சி நினைவுக்கு வந்தது...சில காரணங்களுக்காக இடையிலேயே கைவிட்டு இருந்தார்...

புனி இன்னும் அந்த பெண் சொன்னது உண்மையா இல்லையா என்ற சிந்தனையில்.இருந்தாள்..அருகில் வைத்தி வந்தார்..

"என்ன செய்ய போறீங்க டாக்டர்?" கேட்டாள் புனி

"அதான் யோசிக்கிறேன் கேட்கவே வித்தியாசமா இருக்கே?"

"அந்த பெண் நல்லாதானே இருக்கா..இல்ல ஒரு மாதிரியா..??"

"இல்லை.. அவள் மனநிலையில் எந்த வித பிரச்சினையும் இல்லை..அருமையாக கவிதை எழுதுவாளாம், நான் பேசியபோதும் நன்றாக புரிந்துகொண்டு பேசினாளே' என்றார்



“அப்ப அந்த பெண்ணுக்கு உங்களின் முடிவு என்ன?”

“நான் கொஞ்சநாள் முன்னாடி மனதைக் கண்டறிய சில சோதனை முயற்சிகள் செய்து கைவிட்டேன். அதை மீண்டும் முயற்சிக்கலாம் என நினைக்கிறேன்”

“மனசை கண்டறிய முயற்சியா எப்படி?” என்றாள் ஆச்சர்யமாக..

“மூளையில் ஒரு பகுதி அல்லது அதில் ஏற்படும் எண்ணங்களே மனசு...அப்படி மூளையில் எண்ணங்கள் ஏற்படும்போதோ அல்லது ஒரு தகவலை ஒரு நிலையில் இருந்து மற்றொரு நிலைக்கு nerve cells கடத்தும் போது வேதியியல் ரசாயன மாற்றத்தால் neuron-களில் ஏற்படும் குறைந்த அளவு மின்சக்தியை வைத்து எண்ணங்கள் எங்கு இருந்து வருகின்றன என்பதை கண்டறிய nanotechnology முறையில் இரத்த செல்களை விட மிக நுண்ணிய அளவிலான சிப்களை உருவாக்கி இருந்தேன்...இந்த சிப்கள் குறைந்த அளவு மின்சார அளவைக்கூட கண்டுபிடித்து அது இருக்கும் இடத்திற்கு செல்லகூடியது..இவை ரத்தத்தில் கலந்த சில நிமிடங்களில் எங்கு மின்சார தூண்டுதல் இருக்குமோ அதை நோக்கி தானாக பயணிக்கும்...இதை வைத்து மனசு எங்கு இருக்கிறது என்பதை ஒருவாறு கணிக்கலாம்”

“அப்படி என்றால் மூளையில் நடக்கும் எல்லா தகவல் பரிமாற்றத்தின் போதும் இந்த மின்சார தூண்டுதல் இருக்குமே பின்னே எப்படி இந்த சிப்கள் சரியாக மனதை கண்டுபிடிக்கும்..அதோடு இதே மாதிரிதான் EEG (electroencephalograph) ஒன்னு இருக்கே இதுவும் நீங்க சொல்ற மாதிரிதான் மூளையில் நடக்கும் மின் அதிர்வுகளை அளந்து சிகிச்சை அல்லது ஆராய்ச்சி செய்யும் முறை இந்த முறையில் இது சாத்தியமில்லையா என்ன?” என்றாள் புனி

“இல்லை neurons ஆனது neurotransmitters மூலம் ஏற்படுத்தும் மின்சார விசை ஒரே அளவாக இருப்பது இல்லை...என்னை பொறுத்தவரை மிக ஆழ்ந்த எண்ணங்களின் போது அதிக

மின்சாரம் வெளிப்படுத்த வாய்ப்புண்டு...நாம் சோதனையின் போது அந்த மாதிரியான எண்ணங்களை உருவாக்க வேண்டும். மேலும், நீ சொல்லும் EEG முறையில் வெளியில் இருந்து மொத்தமாக சில குறிப்பிட்ட பகுதிகளில் மட்டுமே மின்சார உணர்வுகளை அளக்க முடியும். ஆனால் நான் உருவாக்கிய சிப் மூளையின் எல்லா முடுக்குகளிலும் செல்லக்கூடியது. அதோடு இந்த சிப் எங்கு செல்கின்றது என்பதை வெளியில் இருந்தே நாம் திரையில் அது கொடுக்கும் தகவலின் மூலம் காண முடியும்".

"இதை ஏற்கனவே சோதித்துப் பார்த்து இருக்கீங்களா?" என்றாள்

"ஆமாம் ஒருமுறை சோதித்து பார்த்தேன். செலுத்திய வேகத்தில் வேகமாக சென்று மூளையின் ஒரு பகுதியில் போய் எல்லாம் நின்று விட்டது. அந்த இடத்தில் பல பகுதிகள் உள்ளடங்கி இருந்ததால் என்னால் சரியாக முடிவை எடுக்க முடியவில்லை" என்றார்

"இந்த முறை சரியாக இருக்குமா என்ன?"

"சோதித்துதான் பார்க்க வேண்டும்" என்றார்

அந்த பெண்ணை அழைத்து செய்யப்போவதை விளக்கி, சம்மதம் பெற்று அவளது உடலில் அந்த மிக நுண்ணிய சிப்களை செலுத்தியவுடன் ..முதலில் ரத்தத்தோடு வேகமாக பயணித்தாலும் அது மூளையை நோக்கி செல்லவே இல்லை. இதை பார்த்த புனிக்கும் வைத்திக்கும் ஆச்சர்யம்.

.

"இவள் சொன்னது உண்மைதான்" என்றார் வைத்தி.

சிறிது நேரம் பார்த்தும் பயனில்லை என்பதால் ..வைத்தி சோகமாக திரும்பி வந்து யோசித்து கொண்டு இருக்க..புனி அவரின் அருகில் வந்து நிற்க ...அவர்களுக்குள் என்ன நடக்கின்றது என்பதே புரியாமல் அந்த பெண் அப்பாவியாய் உட்கார்ந்து இருந்தாள்..

புனி வேகமாக அவளை நோக்கி சென்று..

"நீ யாரையாச்சும் காதலிக்கின்றாயா என்ன?"

அவள் "ஆமாம்" என்பது போல தலையாட்டினாள்

புனி மெல்ல சிரித்தாள். வைத்தி கண்டுபிடிக்க முடியாத ஒன்றை தான் கண்டுபிடித்துவிட்ட சந்தோசம் அந்த சிரிப்பில் இருந்தது..

((கதையில் மனதை கண்டறியும் முறை கற்பனை..EEG முறை மருத்துவ வழக்கத்தில் இருக்கும் ஒன்று..))

-----------x-----------x-----------x-----------

## 14. ''புனி''தன்

புத்தகத்தில் எதையோ தேடிக்கொண்டிருந்த வைத்தியின் எதிரில் தயங்கிய படி நின்றவளை..நிமிர்ந்து என்ன? என்பது போல பார்த்தார்..

"நான் ஒரு முயற்சி செய்தேன் கொஞ்சம் உருப்படியாக வருவது போல இருக்கு அதை சரியா முடிக்க உங்க உதவி வேணும்" என்றாள்

"என்ன பண்ணியிருக்கே?"

"குரங்குக்கும் மனிதனுக்கும் குரோமோசோம்களில் இருக்கும் வித்தியாசத்தை கொஞ்சம் செயற்கையாக மாறுபடுத்தி அதில் இருந்து வேறொரு உயிரினம் உருவாகிறதா பார்த்தேன் சாத்தியம் இருப்பது போல இருக்கு"

"இது எப்படி சாத்தியம்?" கேட்டார் வைத்தி

"குரங்குக்கு உள்ள மொத்தம் 24 குரோமோசோம், நமக்கு 23. குரங்கின் 11 & 12 குரோமோசோம்தான் சுருங்கி மாற்றம் அடைஞ்சி நமக்கு 2-ஆவது குரோமோசோமா இருக்கு..... இன்னும் சில குரோமோசோம்களில் மாற்றங்கள் இருந்தாலும் இந்த இரண்டு குரோமோசோம்கள் எப்படி சேர்ந்து தடித்து ஒன்றாக மாறி மனிதனில் பல மாற்றங்களை தந்ததோ அதே மாதிரி இப்ப மனிதனுக்குள் இருக்கும் இரண்டு குரோமோசோமை செயற்கையாக மாற்றி அதை ஒரு உயிராக வளரவைத்தால் என்ன? என்று செய்துபார்த்தேன். அந்த வகையில் மாற்றம் செய்து ஒரு செல்லை உருவாக்கி விட்டேன். அதை முழுவதும் வளர வைக்கவேண்டும்..."

"அப்ப நீ உருவாக்கி இருக்கும் செல்லுக்கு 22 குரோமோசோம்தானா?"

"ஆமாம்..இதுக்கு கருவில் இணைய பொருத்தமாக இன்னொரு ஜோடி குரோமோசோமை (கருமுட்டையில் கொண்ட) வடிவமைத்து, இருக்கிறேன். எனவே, இந்த இரண்டையும் in-vitro முறையில் இணைக்கும்போது இணைவதில் எந்த ஒரு பிரச்சினையும் வராது" என்றாள்.

வைத்தி அவளை ஆச்சரியமாக பார்த்தார். என்ன வேலை செய்து இருக்கிறாள் இவள்..!

"அப்படியே வளர வைத்தாலும், இது முழு கருவாக வளரும் என்பதில் முழு நம்பிக்கை எனக்கில்லை" என்றார்

"முயற்சி செய்து பார்க்கலாமே" என்றாள்

சரி என்றவர் அதற்குத் தயாரானார். இரண்டு செல்களையும் சரியாக இணைத்து கருவாக வளரவைத்ததில் எந்த ஒரு பிரச்சினையும் இல்லாமல் வளர்ந்தது. கவனமான கண்காணிப்பில் பல மாதங்கள் கடந்து இருந்தன.



அவர்களின் பெரிய ஆச்சரியம் அந்த கரு அதிக வேகமாக வளர்ந்ததுதான். சாதாரண மனிதக்கரு ஆறு மாதத்தில் என்ன வளர்ச்சி வளர்ந்து இருக்க வேண்டுமோ, அது இதில் மூன்று மாதங்களில் வளர்ந்து இருந்தது. வளரும் உருவம் மனித அமைப்பைக் கொண்டு இருந்தாலும் அதன் கணிக்க முடியாத வளர்ச்சியால் அவர்களுக்கு இந்த கரு எப்போது முழுமையடையும் என்பதில் குழப்பம் இருந்தது.

குழந்தையாக வளர்ந்து அதை வெளியில் எடுத்து செல்லை சோதித்து பார்த்தபோது இருந்த மொத்த குரோமோசோம்களின் எண்ணிக்கை 44 -ஆக இருப்பதை உறுதி செய்து ஆச்சரியப்பட்டார்கள்.

புனி உனது ஆசை நிறைவேறி விட்டது என்றார்...இதற்கு ஒரு பெயர் வைக்கலாமா என்றாள்...அப்போது அது கையை காலை ஆட்டியபடி இருந்தது....

"இதை நீ கண்டுபிடிச்சதால் புனிதன் என்று வைக்கலாமே?"

அவளும் சிரித்து கொண்டே சம்மதித்தாள்.... அதன் நிறம் கொஞ்சம் வேறமாதிரியாக இருந்தது. அவர்கள் காத்து இருந்தது அதிலுள்ள சிறப்பு அம்சம் என்ன இருக்கின்றது என்பதை அறியத்தான்.

மறுநாள் சோதித்து பார்த்தபோது வைத்திக்கு அதிர்ச்சி. அதன் உடலில் எந்த பொருள்கள் சென்றாலும் அது உருகி அழிந்தது.... ரத்தம் எடுக்க ஊசியை குத்தியபோதுதன் உணர்ந்தார். எலும்பு அமைப்புகளை பார்க்கும்போது என்ன செய்தாலும் உடைக்க முடியாதவை. சொல்லப்போனால் உலகத்தில் இப்போது இருக்கும் எந்த ஒன்றை வைத்தும் புனிதனை அழிக்க முடியாது என்பதை சரியாக வைத்தி உணர்ந்து இருந்தார்.

இருவரும் கவலையில் இருந்தனர்....ஏதாவது பிரச்சினை என்றால் புனிதனை அழிப்பது சாத்தியமில்லை. அதே நேரத்தில் அவனால் எந்தவொரு பிரச்சினையும் இல்லையென்றால் ஒருவிதத்தில் வெற்றி. எதுவும் புனிதனின் வளர்ச்சிக்கு பிறகுதான் தெரியும்.

உணவுமுறையில் எதுவுமே சரியில்லை...கண்ணில் படுவதை பிய்த்து திங்க ஆரம்பித்து இருந்தான்...கையை கட்டி போட்டும் பயனில்லை..புனிதனை பற்றி எதையுமே புரிந்துகொள்வது முடியாமல் போனது..அவனை வெளியில் இப்படியே நடமாடாமல் அடக்கி வைத்து இருப்பது முடியாத காரியம்..அதே நேரத்தில் ஏதாவது செய்து அழிப்பதும் சாத்தியமில்லை....

என்னதான் யோசித்தும் புனிதனைப் புரிய முடியவில்லை என்பதால் அழிக்க முடிந்த வழிகளை யோசித்தார்கள்..புனிதனை உருவாக்கியதில் புனிக்கு முதலில் கொஞ்சம் சந்தோசம். இருந்தாலும் இப்போது பெரிய கவலையில் இருந்தாள்...புனிதனை அழிக்க முடியவில்லை என்பதை நினைத்து ...

நாட்கள் கழிய புனிதனின் சேட்டைகள் அதிகமானது...செயல்கள் எல்லாம் வித்தியாசமாக இருந்தன..வேகமான வளர்ச்சியால் சில நாள்களில் நடக்க ஆரம்பித்து இருந்தான்..

"இவனை அழிக்க ஒரு வழியுமில்லையா டாக்டர் ?"

"அதான் நானும் முயற்சித்து தோத்துட்டேன்" என்றார்

"எல்லாம் என் தப்புதான்..இதை செய்யாமல் இருந்து இருக்கலாம்"

"ஒரே வழி இருக்கு"என்றார்

"என்ன வழி?"

"புனிதனின் கதையை முடிக்க ஒருவனால் மட்டுமே முடியும்"

"யாரது? அவனிடம் சொல்லி வேகமா முடிக்க சொல்லுங்க அடுத்து இவன் என்ன செய்வான்னு நினைக்கவே பயமா இருக்கு" என்றாள்

"சரி கணேஷிடம் பேசி "புனி"தன் கதையை முடிக்க சொல்கிறேன்."என்றார்.

(இதில் "புனி"தன் கதை என்பது கணேஷ் மேலே எழுதிய கதை ....புனிதனின் உயிர் இல்லை..)

-----------x-----------x-----------x-----------

## 15. தமிழ் மூளை

அந்த பெண் உள்ளே நுழையும்போது வைத்தியும், புனியும் படித்துக்கொண்டு இருந்தார்கள். அவள் வந்து அமைதியாக எதிரில் நின்ற பிறகுதான் கவனித்தார்கள்.. பேசத்தொடங்கினாள்

"உங்களின் உதவி வேண்டும்?"

"எதுக்கு என்ன பிரச்சினைக்கு?"என்றார்

புனியும் புத்தகத்தை மூடி வைத்துவிட்டு அந்த பெண் சொல்வதை கேட்க ஆர்வமானாள்..

"எனக்கு வர வர மொழியை படிக்க எழுதுவதில் சிரமம் இருக்கின்றது...என்ன எழுத்து இருக்கின்றது என்பதில் இருந்து படித்தவற்றை புரிந்துகொள்வது வரை பிரச்சினை...இதனால் எதையும் கற்றுகொள்ள முடியவில்லை...பகிரமுடியவில்லை..இந்த பிரச்சினை முன்னர் இருந்தே எனக்குள் இருந்து இருக்கின்றது வீரியம் இப்போதுதான் அதிகமாக இருக்கு...அதான் உங்களிடம் வந்தேன் ஏதாவது செய்து சரிபடுத்துங்கள்"

"உங்களுக்கு எத்தனை மொழிகள் தெரியும்?"கேட்டார்

"தமிழ் மட்டும் நன்றாக தெரியும் மற்ற மொழிகள் சொல்லி கொள்ளும்படி இல்லை"

"நீங்கள் படிக்க முனைவது தமிழ் சார்ந்தவை மட்டும்தானே?"

"ஆமாம்" என்றாள்

"சரி பிரச்சினை இல்லை சரிசெய்து விடலாம்.. சிறு அறுவை சிகிச்சை செய்யவேண்டியது இருக்கும்..ஆனால் அதுக்கு பிறகு நீங்கள் தமிழை சரியான முறையில்பேசலாம் எழுதலாம்..மற்ற மொழிகள் பற்றி உறுதியாக சொல்ல முடியாது இதற்கு சம்மதம் என்றால் ஒருவாரம் கழித்து வாருங்கள்"

"சம்மதம்தான் தமிழ் மட்டும்போதும்" மீண்டும் வருவதாக சொல்லிவிட்டு கிளம்பினாள்

"நீங்கள் எதுக்குமே மறுப்பு தெரிவிக்க மாட்டீங்களா டாக்டர்?" கேட்டாள் புனி

"எதுக்கு தெரிவிக்கணும் எல்லாமே அறிவியல் சார்ந்த மருத்துவத்தில் சாத்தியமாக இருக்கும் போது"

"சரி இதை எப்படி செய்ய போகின்றீர்கள்...அதுவும் அறுவை சிகிச்சையின் மூலம நல்லா தமிழ் பேசமுடியுமா என்ன?"

"தமிழ் மட்டுமில்லை எந்த மொழி வேண்டுமானாலும் பேச செய்யலாம்"

"இப்ப தமிழ் நாட்டுல தமிழ் இருக்கிற நிலைமைக்கு உங்களின் இந்த முறை ரெம்ப பயனுள்ளதாக இருக்கும்" என்றாள் சிரித்துக்கொண்டே

"இந்த ஒருவாரத்தில் தமிழில் உள்ள வார்த்தைகள், இலக்கண முறை கொண்ட எல்லா தகவலையும் சேகரித்து எனக்கு கொடு முக்கியமாக பழைய தமிழாக இருந்தால் நல்லா இருக்கும்"என்றார்

"முதலில் என்ன செய்ய போகின்றீர்கள் என்பதை சொல்லுங்கள் எனக்கும் ஆர்வம் அதிகம்" கேட்டாள்.

மொழிகளை பேச புரிந்து கொள்ள நமக்கு உதவுவது மூளையில் உள்ள left mid temporal lobe தான், இதற்கு அடுத்த படியாக உதவுவது frontal and parietal cortex இதில் left mid temporal lobe-ல் ஏதாவது பிரச்சினை என்றால் இந்த மாதிரியான பிரச்சினைகள் வரும்... நாம் செய்ய போவது தமிழின் எல்லா வார்த்தைகளையும் அந்த பெண்ணின் மூளை புரிந்து கொள்ள ஏதுவாக தமிழ் வார்த்தைகள் அடங்கிய ஒரு சிறிய chip-ஐ left mid temporal lobe-ல் பொருத்தி அதை மூளையோடு சரியாக சேர்ந்து இயங்கும்படி செய்துவிட்டால் பிரச்சினைதீர்ந்தது...அதோடு பல புதிய வார்த்தைகளையும் அந்த பெண் நமது சிப் மூலம் தெரிந்திருப்பாள்..நல்ல தமிழ் பேசுவாள் எழுதுவாள்...

"அப்படின்னா தமிழ்நாட்டில் தமிழை வளர்க்க நவீன முறை இதுவகாத்தான் இருக்கும் "

"முயற்சி செய்வோம்" என்றார்

புனி தேடிபிடித்த தமிழ் வார்த்தைகளை மூளையில் பொருத்துவதற்க்கான சிப் ல் ஏற்றி தயார் செய்து இருந்தாள்...வைத்தி அறுவைசிகிச்சை சம்பந்தமான பிரச்சினைகளை ஆராய்ந்து தெளிவு பெற்று இருந்தார்....

அந்த பெண் வந்தாள் ...அறுவை சிகிச்சையின் போது அந்த சிப்போடு பொருத்தவேண்டிய மூளையின் சரியான நியூரான்கள் மற்றும் நரம்புகளை இணைத்து சிப்பில் இருந்து தகவல் சரியாக கடத்தபடுகின்றதா எனபதை ஒருமுறை சோதித்து பார்த்துவிட்டு முடித்தார் வைத்தி.

விழித்தபிறகு அவளது கையில் ஒரு தமிழ் புத்தகம் கொடுத்து சில நிமிடங்கள்வரை வாசிக்க சொல்லிவிட்டு..

"என்ன புரிகின்றதா? முந்தைய நிலைக்கு இப்ப எப்படி இருக்கு?"கேட்டார்

"எளிமையாக இருக்கு" என்றாள் அந்த பெண்

"உங்களுக்கு நான் பொருத்திய சிப்பில் அதிகம் பழமையானவார்த்தைகள்...நீங்கள் ஆதிகால தமிழையும் எளிதாக புரிந்து கொள்ளலாம்" என்றார்

நன்றி சொல்லிவிட்டு அவள் கிளம்பிசென்ற சிலமணி நேரத்தில்...

"நாம் அந்த பெண்ணுக்கு பெரிய தவறை செய்துவிட்டோம். இதை பற்றி நாம்முன்னமே கொஞ்சம் யோசித்து இருக்க வேண்டும்...அவள் பாவம்". என்றார் கவலையாக

"ஏன் டாக்டர் ஏதாவது சிகிச்சையில் தவறு நடந்து விட்டதா என்ன?"

"இல்லை சிகிச்சை எல்லாம் சரிதான்...அவளுக்கு இப்போது இருப்பது நல்லசெயற்கையான தமிழ் அறிவு அதைவைத்து கொண்டு இப்போதைய தமிழ்நாட்டு சூழலில் எப்படி சமாளிக்க போகிறாள்...இப்போ இருக்கிற தமிழின் நிலமைதான் உனக்கு தெரியுமே...இதை நாம் முதலிலேயே யோசிக்காமல் இந்த தவறை செய்து விட்டோமே என்ற கவலைதான் எனக்கு"

(இந்த பிரச்சினை யாருக்காவது இருந்தால் வைத்தியின் முகவரி கிடைக்கும்..கொடுக்கிறேன் சரிசெய்து கொள்ளுங்கள்..புனியின் முகவரி கிடைக்காது)

-----------x-----------x-----------x----------

## 16. ஆனால்

"புனி உனக்கு காதல் ஏதும் உண்டா?"

"எதுக்கு டாக்டர் திடீர்னு கேட்க்கிறிங்க?" என்றாள் கொஞ்சம் பயந்தபடி

"இல்லை நான் பார்த்தவரையில் நீ நல்ல அறிவாளி பெண்ணாயிற்றே அதான் இந்த காதல் பேரிக்காய் செய்கிறாயா என கேட்டேன்" என்றார்

தந்தை வயதுடையவர். மிகபிரபலமான மருத்துவர் இந்த கேள்வியை கேட்டதால்... அவளுக்குள் உண்மையை சொல்லவா? இல்லை பொய் சொல்லவா? என யோசித்து கொண்டு இருக்கும் போதே....

ஆய்வுகூடத்தில் ஒருவன் நுழைந்தான்..நேராக அவர்கள் உட்கார்ந்து இடம் நோக்கி வந்தவன்..

"இங்கு வைத்தி என்பவர்?".

"நான்தான் என்னவேண்டும்"

"எனக்கு ஒரு பிரச்சினை" என்றான்

"என்ன?" கேட்டார் வைத்தி

"இரண்டு ஆண்டுகளாக ஒரு பெண்ணை காதலிக்க முயற்சி செய்கிறேன் ஆனால் அவள் என் காதலை ஏற்றுக்கொள்ள மறுக்கிறாள்"

"நான் ஒரு மருத்துவர் அதற்கு என்னால் என்ன செய்யமுடியும்" என்று சொன்னவர்..புனியை அது நீதானா என்பது போல பார்த்தார்..அவள் வேகமாக இல்லை என்பது போல தலையசைக்க..

"அவள் பின்னாடி சுற்றியதுதான் மிச்சம்.... இதுவரை என்னிடம் எந்த ஒரு பதிலையும் சொன்னதில்லை..இனிமேலும் அவளை பின்தொடரவோ.. என் காதலை வற்புறுத்தவோ போவதில்லை" என்றான்

"நான் திரும்பவும் கேட்கிறேன்..நான் என்ன செய்ய வேண்டும் என்பதை சொல்லுங்கள்"

"அவளின் நினைவுகளை என்னால் மறக்க முடியவில்லை..அவளின் வீடு வேறு என் தெருவில் அமைந்து இருப்பதால் பார்க்காமலும் இருக்க முடியாது.......நிறைய கனவுகள்......வலிகள் எல்லாம் கொடுக்கிறாள் காதலை தவிர.....எனக்கு வேண்டியது அவளை பார்க்கும் போது எந்த ஒரு உணர்வும் வரகூடாது..அவள் சாதாரண பெண் என்பதைத்தவிர..அதற்கு நீங்கள் என்ன செய்தாலும் நான் தயார்" என்று வேகமாக சொல்லி முடித்தான்...

"ஏன் உலகத்தில் அவள் ஒருத்திதான் பெண்ணா? அவளை விட்டுவிட்டு வேறு யாரையாச்சும் கதாலிக்கலமே"

"காதல் பற்றி உங்களுக்கு தெரியாது..அது ஒருவள் மேல் ஒரு தடவைதான் வரும்..அது எனக்கு இப்போது வந்து இருக்கிறது ஆனால் அவள் மறுக்கிறாள்" என்றான்

"அந்த ஹார்மோன் விளையாட்டை பற்றி எனக்கு நல்லா தெரியும்....சரி இதுக்கு என்னை எந்தவிதத்தில் நம்புகிறீர்கள்?"

"நீங்கள் புதியவற்றை செய்வதில் திறமையானவர் என்று கேள்விபட்டு இருக்கிறேன்.".என்றான்

"சரி அவளை முழுவதும் மறக்க வேண்டுமா? இல்லை அவளை பார்க்கும்போது வயிற்றுக்கும் தொண்டைக்கும் இடையே உருளுமே அந்த உருளை மட்டும் உருள வேண்டாமா?"

"அந்த உருளை உருள வேண்டாம்" என்றான்

"அவளது புகைப்படம் இருக்கா?"

"இப்போது இல்லை...நாளைக்கு எடுத்து வருகிறேன்..இப்போது இது சாத்தியமா என்று மட்டும் சொல்லுங்கள் நிம்மதியாக தூங்குவேன்" என்றான்

"இது சாத்தியம் தான்.....நீங்கள் இனிமேல் அந்த பெண்ணை பார்க்கும்போது பழைய காதல் உணர்வுகள் ஏதும் தோன்றது.....இதற்கு பிறகு அவளை காதலிக்காமல் இருக்கும்வரை....மீண்டும் அவளின் பின் சுற்றி காதல் வளர்த்தால் நான் பொறுப்பில்லை" என்றார்

"இல்லை கண்டிப்பாக செய்ய மாட்டேன்.....நாளை புகைப்படத்தோடு வருகிறேன்"" என்று சொல்லிவிட்டு கிளம்பினான

" எப்படி இது சாத்தியம்?" கேட்டாள் புனி

"கொஞ்சம் சிக்கலானது..காதல் எல்லாம் ஹார்மோன் விசயம்தானே..அதே முறையில்தான் இதையும் செய்ய வேண்டும்" என்றார்

"இதுமட்டும் சாத்தியம் என்றால் காதலுக்காக தற்கொலை, தாடிவளர்ப்பது, உருகி உருகி கவிதை எழுதுவது இல்லாமல் போயிடுமே"

"பார்ப்போம் முதல் முயற்சி" என்றார்.

"எப்படி செய்ய போகிறீர்கள்?"

"உனக்கு தெரியும் நமது பார்வை மண்டலம் எப்படி வேலை செய்கின்றதுஎன்று.....முதலில் பிம்பம் நமது கண்ணில் படும்போது retina வில் இருக்கும் rod மற்றும் cone போன்ற photoreceptor செல்கள் வழியாக உணரப்பட்டு பின் இந்த rod,cone தான் உணரும் பிம்பங்களுக்கு ஏற்றவாறு ஒருவிதமான glutamate எனும் அமினோ அமிலம் அளவில் கூடும்....இதுதான் rod, cone-ல் இருந்து தகவல்களை bipolar செல்களுக்கு கொடுக்கும் ... பின் அது ganglion செல்கள் வழியாக மூளைக்கு செல்கின்றது...

இப்போது அவன் காதலியின் புகைப்படத்தை பார்க்கும்போது அவனுக்குள் இந்த glutamate அமிலத்தின் சுரக்கும் அளவு அதன் தன்மை போன்றவற்றை தெரிந்துகொண்டு பின் அதை நாம் செயற்கையாக மாற்றினால் மூளைக்கு போகும் தகவலும் மாறும்..அவன் அந்த பெண்ணை பார்ப்பான் ஆனால் தெரிவது அவனது பழையகாதலி இல்லை.....ஏனென்றால் அந்த காதல் எண்ணம் ஏற்பட ஆதாரம் இந்த தகவல்கள்தான்.....அதை நாம் மாற்றுவதால் அவனுக்கு அந்த காதல் உணர்ச்சிகள் இருக்காது...

அதே நேரத்தில் அந்த புகைப்படத்தில் இருப்பது சாதாரண பெண் என்பதை மட்டும் அவனது மூளை உணரும்..அவ்வளவுதான் விசயம்..அதற்கு பிறகு இவன் அந்த பெண்ணைஎத்தனை முறை பார்த்தாலும் காதல் இல்லை.. இவன் இன்னொருமுறை அவளை காதலிக்க ஆரம்பிக்காத வரையில்"

"விழியில் விழுந்து இதயம் நுழைந்த உறவே என்ற காதலின் அடிப்படையை கொஞ்சம் மாற்றபோகிறீர்கள் அப்படித்தானே" என்றாள்

"ஆமாம் இதில் விழியில் விழுவது ஒன்று இதயம் நுழைவது ஒன்று" என்றார் சிரித்துகொண்டே.....

* * * * *

புகைப்படத்தை பார்த்த வைத்தி அவனை ஒரு நாற்காலியில் உட்காரவைத்துவிட்டு அவனின் எதிர்புறத்தில் அந்த புகைப்படத்தை தெரியுமாறு அமைத்தார்..அதற்குள் புனி அவனது தலையில் வயர்கள் கொண்டு பல இணைப்புகளை கணினியோடு இணைத்து இருந்தாள்...

"இப்போது அந்த புகைப்படத்தை எப்போதும் பார்ப்பது போல பாருங்கள்" என்றார்

புனி சில அளவுகளை குறித்துகொண்டாள்..அடுத்துவந்த சில மணிநேரத்தில் வைத்தியின் முயற்சியில் அவனுக்கு அவளின் புகைப்படம் பார்க்கும்போதுசுரக்கும் அமிலத்தின் அளவில், தன்மையில் மாற்றம் செய்து இருந்தார்கள்...

அவன் அங்கு இருந்து வெளியில் வந்து வீடு திரும்பும் அதே நேரத்தில் அவனது தெருமுனையில்...இரண்டு பெண்கள்..

"அவனை இவ்வளவு நாள் சுத்தவிட்டுட்டு இப்பபோய் உன் காதலை சொன்னால் அவன் சம்மதிப்பானா என்ன? என்றாள் ஒருவள்

"படிக்கின்ற காலத்தில் காதல் என்று சுற்றினால் சரியாக படிக்கமுடியாது என்பதற்காகத்தான் என் காதலை மறைத்தேன் என்பதை அவனிடம் சொல்வேன்" என்றாள் அவனின் முன்னால் காதலி.

அவன் தூரத்தில் வருவதை பார்த்தவுடன் அவள் கண்களில் காதல்,முகத்தில் ஒருவித புரியாத வெட்கம்....

அருகில் நெருங்கி வருவதை பார்த்தாள்...எப்படி ஆரம்பிப்பது..அவனைநிறையாமுறை தவிர்த்து இருக்கிறோம்..என்ற தவிப்பில்..... அவனே வழக்கம் போல வந்து பேசினால் சொல்லிவிடவேண்டுமென்று நினைக்கையில் ...அருகில வந்தான்...பார்த்தான்...

ஆனால்..

(இதில் கண் செயல்படும்விதம சரியானது...அதில் செய்யும் மாற்றம் என் கற்பனை))

-----------x-----------x-----------x-----------

## 17. நான் அல்லாத நான்

எனது விண்கலம் முழுவதும் தானாக இயங்கும் விதத்தில் அமைக்கப்பட்டது..சில கட்டுப்பாடுகள் என்னிடமும், பிரதான கட்டுப்பாடு பூமியிலும் இருந்தது...

கண்ணிமைக்கும் நேரத்தில் .....என் ஒருபுறம் அந்த விண்கலம் திடிரென்று தோன்றியது...அது தோன்றியதில் இருந்து கண்டிப்பாக அது ஒளியின் வேகத்தில் பயணித்து இருக்க வேண்டும்...அடுத்த இரண்டு நிமிடங்களில் என்னோடு இருந்த பூமியின் தகவல் தொடர்பு துண்டிக்கப்பட்டு முழு விண்கலமும் அவர்களின் கட்டுபாட்டுக்குள் போனது..நான் சில கட்டளைகள் பிறப்பித்தும்...பயனில்லை...அந்த கலத்தை தொடந்து எனது கலம் பயணித்தது...

தரையிறங்கியவுடன்...அந்த கலத்தில் இருந்து..இரண்டு பேர் என்னை நோக்கி வந்தார்கள்.......என்ன ஆனாலும் எனது கலத்தின் கதவை திறக்க கூடாது என்றுதான் இருந்தேன்....ஆனால் அவர்கள் கிட்டே வர அது தானாக திறந்தது....

பயணத்தின் தொடக்கத்திலியே முடிவாகியிருந்தது...இது வேற்று கிரக ஆய்வு பயணம்..என்னவேண்டுமானாலும் நடக்கலாம் ......இருந்தாலும் அந்த நேரத்தில் உயிரின் மேல் பயம் வந்தது...என்ன செய்வார்கள்..எப்படி சாமாளிப்பது...??

வெளியில் நின்று இருந்தார்கள..சைகை காட்ட கிழே இறங்கினேன்...விமானத்தில் இருந்து நான் சுவாசித்து கொண்டு இருந்த உயிர்வாயு இப்போதும் என் முகத்தோடு இணைக்கப்பட்டு இருக்க..... ஒருவன் வந்து அதை நீக்கினான்...அவ்வளவுதான் கதை முடிந்தது என நினைத்தேன்...என் சுவாசம் தொடர்ந்தது..அப்படியென்றால் அங்கு உயிர்வாயு இருக்கின்றது...

ஏதும் உரையாடாமல் அழைத்து சென்றார்கள்...அவர்களுக்குள் பேசிக்கொள்ளவில்லை..கட்டடங்கள் போல இருந்த எல்லாம் ஒருவித தகடு போன்ற பொருளால் இருந்தது...அந்த அறைக்குள் நுழையும் போது மெல்லிய ஒரு சத்தம் ......

அந்த நாற்காலி போன்ற ஒன்றில் கட்டாயபடுத்தி அமர வைத்தார்கள்...தலைக்கவசம் போல இருந்த ஒன்றை ஒருவர் மாட்ட..அங்கு இருந்த இன்னொருத்தன்...அவனது மேசையில் எதையோ அழுத்தினான...

எனது தலையில் சிறிய அளவிலான மின்சாரம் பாய்ந்தது போல இருக்க..நினைவிழந்தேன்...

* * * * *

கண்விழித்த போது...எதிரில் சிலர் அமர்ந்து இருந்தார்கள்....ஆச்சர்யம் அவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்பது எனக்கு புரிந்தது....மேலும் அந்த கிரகத்தை பற்றிய எல்லா அறிவுகளும் இருந்தது...

“இப்போது உனது மூளையில் இருந்த உனது அறிவு மற்றும் தகவல்களை நீக்கி விட்டு எங்களின் கிரகத்துக்கு ஏற்றாற்போல் உனது மூளையில் மாற்றம் செய்து இருக்கிறோம்...உனது பழைய எல்லா தகவல்களும் ஒரு கோப்பில் இருக்கின்றது அதை திரும்பவும் நீ பெற முடியும்...இப்போது நீ எதையாவது எங்களுக்கு உணர்த்த அதை நீ நினைத்தாலே போதுமானது” என்று அவர்கள் உணர்த்தினார்கள்.

“என்னை என்ன செய்வீர்கள்? எப்போது நான் திரும்புவேன்” நினைத்தேன்

“பிரச்சினை இல்லை..உன்னை ஒன்றும் செய்யபோவதில்லை...நலமாக திரும்பி போகலாம்”

“பின்னே எதற்கு என்னை இங்கே வைத்து இந்த மாற்றம் எல்லாம்”

“உங்களின் கிரகத்துக்கு நாங்களும் அடிக்கடி வந்து போய் இருக்கிறோம்...ஆனால் உங்களால் எங்கள் இனத்தவரை பிடிக்க முடியவில்லை...இப்போது முதன் முறையாக அங்கிருந்து வந்து இருக்கிறாய்...இந்த கிரகத்தை பற்றி கொஞ்சம் தெரிந்து கொண்டு போகத்தான் இந்த வழி....உங்களது அறிவால் எங்களை தெரிந்து கொள்வது என்பது இயலாத காரியம்...அதனால் இங்கு இருக்கும் சில பொதுவான விசயங்களை உனது மூளைக்குள் கொடுத்து இருக்கிறோம்” உணர்த்தினார்கள்

“எவ்வளவு காலம் இருக்க வேண்டும்” நினைத்தேன்

“உனது விருப்பம்...நீ இங்கு சுற்றி திரியலாம்..எப்போது போகவேண்டும் நினைக்கிறாயோ..உனது பழைய எண்ணங்கள் உனக்கு திரும்பி வழங்கபடும்... நீ உனது கிரகத்துக்கு பயணிக்கலாம்”

வெளியில் போனேன்...இது என்ன புதிய திருப்பம் என்று நினைத்து கொண்டே நடந்தேன்..யாரும் என்னை கண்டுகொள்ளவில்லை..எல்லாம் அவரவர் வேலையில் இருந்தார்கள்...

அருகில் அமர்வதற்க்கான இடம் இருந்தது...அமர்ந்தேன்..அதன் மேசையில் பார்த்தால் ஒளிரியது..நமது கணினி போல அதை மேசையோடு வைத்து இருந்தார்கள்....அதில் எல்லா விதமான புத்தகம், யார் யாருக்கு என்னென்ன வேலை...போன்ற கிரகத்தின் எல்லா தகவல்களும் தெரிந்து கொள்ளும்படியிருந்தது..

அந்த கிரகத்தில் யாரும் தனியில்லை..நாடு இல்லை..பிரிவு இல்லை..கிரகமே ஒன்றாய் இருந்தார்கள்..எல்லோர்க்கும் பொதுவான விதிகள்...யாருடைய ஆட்சியும் இல்லை..அவர்களுக்கு தெரிந்த வேலைகளை பார்த்தார்கள்...சம்பளம் என்று எதுவும் இல்லை..

அவர்களின் உணவு என்றால் ஒரு திரவம்தான்....அந்த கிரகத்தில் இருந்தே கிடைத்தது...அவர்களிடத்தில் முன்னேற்றம் என்பதைவிட நமது சாதாரண மூளையால் புரிந்து கொள்ள முடியாத வகையில் இருந்தது...தனக்கு தெரிந்த வேலையை ஒரு குழுவாக சேர்ந்து செய்தார்கள்..

எங்கும் போக மனமில்லாமல் மீண்டும் அதே அறைக்கு திரும்பினேன்...அமர்ந்து இருந்த அவர்களிடம் சென்று

“எப்படி சாத்தியம் மூளையில் உள்ளவற்றையே மாற்றுவது” என்று நினைத்தேன்

“எங்களை பொறுத்தவரை எல்லாம் இயந்திரம்தான்...எதையும் எங்களால் செயற்கையாக கட்டுப்படுத்த முடியும்....இப்போது நாங்கள் உன் மூளையில் சேர்த்தது சில அடிப்படையான விசயங்கள்தான்... உனக்கு புரிந்து கொள்ளமட்டும்”. உணர்த்தினார்கள்

“என்னை விட்டு விடுங்கள் நான் போகிறேன்” நினைத்தேன்

“சரி போகலாம் உதவுகிறோம்..எங்கள் விமானத்தை உபோயோகிக்கலாம்..இங்கு இருந்து நீ போவதற்கு எங்களின் அறிவு உனக்கு தேவை என்பதால் இப்படியே நீ போகலாம்..உனது பழைய நினைவு கோப்பு உன்னோடு இருக்கட்டும்..எப்போது உன் கிரகம் போகின்றயோ அப்போது விமானத்தில் இதே போன்று ஒரு இயந்திரம் இருக்கு அதில் அந்த கோப்பை உட்செலுத்தி அதை உனக்குள் மாற்றிகொள்ளலாம்”

“இல்லை எனது நினைவையும் கொடுங்கள் எனது கிரகத்தை நெருங்கும்போது மனிதர்களிடம் இருந்து தகவல்களை பெற்று அதற்கு பதில் அளிக்க உதவியாக இருக்கும்..இல்லையென்றால் அவர்கள் என்னை அழித்து விடுவார்கள் அவர்களிடம் ஒற்றுமை இல்லை” நினைத்தேன்

“அதுவும் சரிதான்..உனது முழு நினைவை கொடுத்தால் உன் வழியில் நீ சிந்திக்க தொடங்குவாய்..அது உனது பயணத்திற்கு சரியல்ல..உனது சில அடிப்படையான வேலைகள் செய்யும் நினைவை மட்டும் இப்போது கொடுக்கிறோம்”

சரி என்று நாற்காலியில் அமர்ந்தேன்..மீண்டும் அதே தலைகவசம்..கொஞ்சம் வலி..இப்போது எனக்கு என்ன நடந்தது ...எந்த நிலமையில் இருக்கிறேன் என்பதை உணர முடிந்தது...பூமியோடு தொடர்பு கொண்டால் பதில் அளிக்க முடியும்...எனது நிலையை விளக்க முடியும்..வேறொன்றும் செய்ய முடியாது..மீதம் இருப்பது அவர்கள் என் மூளையில் செலுத்தியது...

“இது நீ செல்லும் விண்கலம் ஒளியின் வேகத்தில் பயணிப்பது...இதில் சில மாற்றங்களை செய்து இருக்கிறோம்...நீ போய் இறங்கியவுடன் இது தானாகவே எங்களிடம் வந்து சேரும்...பயணிக்கும் போது சில கட்டளைகள் பிறப்பிக்க வேண்டும் அது உன் மூளையில் இருக்கிறது..நீ போகலாம்”.

அமர்ந்தேன்...கிளம்பியது...ஒளியின் வேகத்தில் பயணம்...பூமி கட்டுப்பாட்டில் பேசி..தரையிறங்கியவுடன் கதவை அடைக்க அந்த விண்கலம் வேகமாக எம்பி பறந்து கண்ணில் இருந்து மறைந்தது...இப்போது புரிந்தது.. ஒரு முறை கதவை திறந்து முடின உடனே அது திரும்பும் படி செய்து இருக்கிறார்கள்........

அப்போதுதான் நினைவுக்கு வந்தது...அந்த விமானத்தில் என் பழைய நினைவுகள் அடங்கிய கோப்பு,மற்றும் அதை என் மூளைக்குள் ஏற்ற தேவையான இயந்திரம் இருந்தும் அதை ஏற்ற மறந்து நான் அவசரமாக இறங்கிவிட்டு கதவை அடைத்தது....

இப்போது நான் இருக்கும் நிலை...கொஞ்சம் வேற்றுகிரக வாசி..கொஞ்சம் பூமி வாசி...அதாவது அந்த கோப்பு என்னிடம் கிடைக்கும்வரை நான் ஒரு....."நான் அல்லாத நான்"

-----------x-----------x-----------x-----------

## 18. நிலை மாற்றம்

மண்டை ஓட்டு படத்தை வைத்து எதையோ தேடிக்கொண்டு இருந்த தன் அப்பாவிடம், முகியின் ஓவியக்கண்காட்சிக்கு அழைத்து போகுமாறு கேட்டாள்..மதி

"இல்லை எனக்கு முக்கியமான வேலை இருக்கு நீ மட்டும் போயிட்டு வா" என்றார் வைத்தி

"இந்த மண்டை ஓட்டு படங்களை எத்தனை வருடங்கள்தான் ஆராய்ச்சி பண்ணுவீங்க உங்க மகளோட கொஞ்ச நேரம் ஒதுக்குங்க" என்று ஒருவழியாக சண்டை போட்டு அங்குபோக சம்மதிக்க வைத்தாள் மதி..

வைத்தி இப்போது இருக்கும் மூளை சிகிச்சை மருத்துவர்களில் முதன்மையானவர்..இது சம்பந்தமாக பல விதமான ஆராய்ச்சிகள் செய்து பல விருதுகளைவாங்கி இருப்பவர்..தனது வீட்டின் ஒரு பகுதியை தனது ஆராய்ச்சி கூடமாகமாற்றியிருந்தார்...அவரின் இப்போதைய ஆராய்ச்சி மூளை மாற்று அறுவைசிகிச்சை....அதை செய்யும் வழிமுறைகள், அதில் வரும் சிக்கல்கள் போன்றவற்றை பற்றி

கண்காட்சி இடத்தில் அதிக கூட்டம்..ஓவியர் முகி மிக பிரபலமானவர்..அவரது இயற்கையுடன் இக்கால நவீனத்துவம் நிறைந்த ஓவியங்கள் பிரபலம்..

உள்ளே நுழைந்து மதி ஒவ்வொறு ஓவியமாக ரசித்து பார்த்துகொண்டு இருக்க..வைத்தி வேண்டாவெறுப்பாக அவளை பின் தொடர்ந்து கொண்டு இருந்தார்..சில இடங்களில் நின்று அவள் பார்த்த ஓவியத்தை பற்றி அவரிடம் விளக்கும் போது"உம்" மட்டும் கொட்டினார்...

கடந்து செல்லும் வழியில் முகியை சுற்றி பலபேர் நின்று பேசிக்கொண்டுஇருப்பதை பார்த்தவள் தன் அப்பாவிடம் தன்னையும் அறிமுகம் செய்து வைக்கச்சொல்ல...இருவரும் அவரை நெருங்கினார்கள்..

அறிமுகம் செய்து கொண்ட வைத்தி..முகியின் ஓவியத்தின் மீது தனது மகளுக்கு இருக்கும் ஆர்வத்தை பற்றி சொல்லி தனது மகளை அறிமுகம் செய்து வைத்தார்...மதிக்கு சந்தோசம்....

வீட்டிற்கு செல்லும் வழியில் "என்ன மண்டை ஓட்டு படங்களை விட முகியின் ஓவியம் நன்றாகத்தானே இருக்கு?" என்றாள்

"ஆமாம் நல்லாத்தான் இருக்கு ஆனால் எனக்குத்தான் ஒண்ணுமே புரியலை" என்றார் வைத்தி சிரித்துக்கொண்டே...

* * * * *

மறுநாள் வைத்தி மருத்துவமனைக்குள் நுழைந்தவுடன் அவருக்கு அவசர அழைப்பு வந்தது...

பிரபல ஓவியர் முகி விபத்தில் சிக்கி அவரது கீழ்வயிற்று பகுதி முழுவதும்சிதைந்து விட்டதாகவும்..தலையில் சிறிய காயங்கள் இருப்பதாகவும் ஆனால் நினைவு இழந்து இருப்பதாகவும் சொன்னார்கள்...

வைத்திக்கு அதிர்ச்சி..நேற்று இரவுதான் சிரித்து பேசினார்...விரைவாக முகி வைக்கபட்டு இருந்த அறைக்கு சென்றார்...

அடிவயிற்றில் பெரிய ரத்தகறை படிந்த கட்டுடன் கிடத்தபட்டு இருந்தார்....முதலில் அவரது மூளை என்ன நிலையில் இருக்கின்றது என்பதை ஆராய வேண்டும்...

தலையில் சிறிய காயம் என்பதால் பெரிய ஆபத்து ஒன்றும் இல்லை..அதிர்ச்சியில்நினைவு இழந்து இருக்கலாம்..நினைவு வந்தபிறகுதான் எதையும் சொல்ல முடியும்என்ற தனது அறிக்கையை சமர்பிக்கும்போது....முகியின் உடல்நிலையை பற்றி சகமருத்துவரிடம் கேட்டார்...

நெஞ்சுபாகம் முதல் வயிறு வரை சிதைந்து இருப்பதாகவும்...இதனால்நுரையீரல் நசுங்கி பாதிப்பு அடைந்து இருக்கின்றது...தானாக இயங்கும் சக்தி இல்லை...பிழைப்பது கடினம் என்று சொன்னார்கள்...

வைத்திக்கு வருத்தம்..நேற்றுதான் தனது அன்பு மகளின் ஆசையை இந்த முகியோடு நிறைவேற்றினார்...இப்போது..

வருத்தத்தோடு உட்கார்ந்து இருந்தார்...ஒரு யோசனை.... இவரது நெடுங்கால கனவும்கூட.....முகியின் மூளையை ஏன் மாற்றி மற்றொருவருக்கு பொருத்தி அதை செயல்பட வைக்கக்கூடாது...அவரது கடந்த கால ஆராய்ச்சிகளும் இதை பற்றி என்பதால் ஆர்வம் அதிகமானது..

சக மருத்துவரை அழைத்து பேசினார்..முகி உயிர் பிழைக்க இருக்கும்சாத்தியக்கூறுகளை பார்க்கும் போது அவர் பிழைக்க மாட்டார் என்றேசொன்னார்கள்...அவரது இந்த மூளை மாற்று விசயத்தை சொன்னபோது தயக்கத்தோடு சம்மதித்தார்கள்...

முதலில் அதே மருத்துவமனையில் மூளை பெறும் பாதிப்புக்கு உள்ளாகி உடல்நன்றாக செயல்படும் விதத்தில் இருக்கும் ஒரு ஆளை தேர்ந்து எடுத்தார்கள்...அந்த ஆள் இளம் வயதுக்காரர்...மூளையில் ஏற்பட்ட சில பிரச்சினைகளால் தனது உடலின் செயல்பாட்டை இழந்து இருப்பவர்...

வைத்தி யோசித்தார்..முகியின் மூளையை இந்த ஆளுக்கு பொருத்துவதின் மூலம் ஒருவரின் உயிரை காப்பாற்றலாம்...அதே நேரத்தில் முகியின் ஓவியத் திறனும் மறையாமல் இருக்கும்....

வைத்தி அறுவை சிகிச்சைக்கு முன் சக மருத்துவர்களுக்கு உணர்த்தினார்......இது நாம் செய்ய போகும் முதல் மூளை மாற்று அறுவை சிகிச்சை...முதலில் முகியின் மூளையை தனியாக பிரித்து எடுப்போம்..அப்படி எடுக்கும்போது முதலில் அவரது மூளைக்கு தங்கு தடையின்றி oxygen செல்லுமாறு பார்த்துகொள்ளவேண்டும்...அதன் neuron கள் பாதிப்பு அடையாமல் காப்பாத்துவது முக்கியம் ....ஒரு வினாடி தடைபாட்டலும் நமது முயற்சி வீண்...அதே நேரத்தில் யாருக்கு முகியின் மூளையை பொறுத்த போகின்றோமா அவரது மூளையை முழுவதும் வெளியில் எடுப்பதற்கு முன்..ஏற்க்கனவே வெளியில் செயற்கையாக இயங்கி கொண்டு இருக்கும் முகியின் மூளையின் கட்டளைகளை அந்த நபரின் nerve cell களோடு இணைப்பதின் மூலம் அந்த நபரின் உடல் இயக்கங்களை நாம் எளிதாக கட்டுபடுத்தலாம்....அப்புறம் அந்த நபரின் பாதிக்கப்பட்ட மூளையை முற்றிலும்அகற்றிவிட்டு முகியின் மூளையை இயங்க செய்வது .....

ஆனால் இது எல்லாம் சாத்தியமாக இருவரின் neuron களும் சரியாக பொருந்த வேண்டும்...என்பது வைத்தியின் கருத்து ...

செயலில் இறங்கினார்கள்...முதலில் முகியின் மூளையை செயற்கையான முறையில் சுவாசிக்க செய்தனர்..பின் அதன் nerve cell களை அகற்றி வெளியில் குறைந்த வெப்பநிலையில் வைத்தனர்...அடுத்து மற்ற நபரின் சரியான nerve cell களை கண்டறிந்து தனிமைபடுத்தி அதை வெளியில் செயற்கையாக சுவாசம் பெறும் முகியின் மூலையோடு இணைத்தனர்....அடுத்து அந்த நபரின் துண்டிக்கப்பட்ட மூளை அகற்றப்பட்டு முகியின் மூளை சரியாக பொருத்தப்பட்டு... இயக்கபட்டது ...

அந்த நபரின் அனைத்து உடல் விசயங்களும் சோதனை செய்யபட்டது...ஏதாவது ஒருneoron தகவலை சரியாக கடத்தவில்லை என்றாலும் அது ஏதாவது பெரியபிரச்சினைக்கு வழிவகுக்கும் என்பதே அனைவரின் கவலை...அதிருஷ்டவசமாக எல்லாம்சரியாக பொருந்தி செயல்பட்டது...

அவர் கண் விழித்தார்...கைகள் அசைந்தன..எல்லோரும் ஆச்சர்யமாகபார்த்தார்கள்...கண்கள் முழுவதும் திறக்க கஷ்டப்பட்டார்....வைத்தி உட்பட அனைவருக்கும் மகிழ்ச்சி...அந்த நபர் கொஞ்சநேரத்தில் பேச ஆரம்பித்தார்...

அனைவரும் காண விரும்பியது முகியின் மூளையை வைத்து இருப்பவர் அவரைப்போலவே ஓவியம வரைவாரா? என்றுதான்...

அவரை சில சோதனைகள் எடுக்க அழைத்து செல்லும்போது வைத்தி அந்த நபரிடம் சில வார்த்தைகள் பேசினார்...

"நீங்கள் எப்படி உணர்கிறீர்கள்?" என்றார் வைத்தி..

"தலையில் வலி கொஞ்சம் அதிகமாக இருக்கு...அப்புறம் என் கண்ணுக்கு கருப்பு வெள்ளையை தவிர மற்ற வண்ணங்கள் எதுவும் தெரியவில்லையே ஏன்?" என்றார் அந்த நபர்..

வைத்திக்கு எங்கு தவறு நடந்து இருக்கின்றது என்பது புரிந்தது.....ஒன்று விபத்தில் முகியின் மூளை அடிபட்டதில் ..அல்லது..அறுவைசிகிச்சையின் போது தவறான இணைப்பில் நபரின் பார்வை நரம்புகள் பாதிக்க பட்டு இருக்கின்றது....

சில சோதனைகள் செய்த பின்னர் எல்லோரும் ஆர்வமாக காத்து இருக்கும் அறைக்கு அந்த நபர் கொண்டுவரப்பட்டார். அங்கு வைத்தி இல்லை...அவரது முன் ஒரு வரைபலகையும்..தூரிகையும் இருந்தது...அங்கு இருந்த ஒருவர் "ஒரு நிலைமாற்றத்துக்கு பின் நீங்கள் வரையும் முதல் ஓவியத்தை வரையுங்கள்" என்று சொல்ல...

அந்த நபர் கோபமாக பார்த்து கொண்டே .."எத்தனை தடவை சொல்வது எனக்கு கருப்பு வெள்ளையை தவிர வேற வண்ணங்கள் தெரியவில்லை என்று..இதில் எப்படி வண்ண ஓவியம் வரைவது"..

(மூளை மாற்று அறுவை சிகிச்சை என்பது இப்போது சாத்தியமில்லைதான்....இன்னும் இதற்கு எலிகளை வைத்துதான் ஆராய்ச்சிகள் செய்து கொண்டு இருக்கிறோம்....ஆனால் சீக்கிரம் வரலாம்...இது கற்பனைதான்...ஆனால் மேலே சொல்லி இருக்கும் பிரச்சினைகள் ஒரு மூளை மாற்று சிகிச்சை செய்யும்போது ஏற்படும் சில அடிப்படையானவை ...மற்றபடி சிகிச்சை முறை கற்பனையே...)

-----------x----------x-----------x----------

## 19. புதிய வறுமை

கிட்டத்தட்ட அந்த இடமே ஒரு விழா நடப்பது போலத்தான் இருந்தது. அங்கு இருந்தவர்களின் முகத்தில் ஒரு வெற்றி அல்லது முழுமையை அடைந்துவிட்ட சந்தோசம். அந்த ஒருவர் மற்றும் அவரது குடும்பம் எல்லாம் ஒரு இடத்தில் கூடியிருக்க அவர்களுக்கு வாழ்த்துக்கள் சொல்லி எல்லோரும் அவர்களோடு சந்தோசத்தை பகிர்ந்து கொண்டு இருந்தனர்.

நேற்று வரை துக்கத்தில் ஆழ்ந்து இருந்த அவரின் முகம் திடீரென்று பிரகாசமான வாழ்க்கைக்கு மாறியதால் அதன் அறிகுறியை எப்படி வெளிக்காட்டுவது என்பது தெரியாமல் திணறியது. 2071 ஆம் ஆண்டில் கண்டிப்பாக இது நிகழும் என யாரும் எதிர்பார்த்து இருக்க மாட்டார்கள்தான். ஆனால் இந்த மனிதர்களின் அறிவுத்தன்மை மாற்றிபோட்டுத்தான் விட்டது.

சுமார் முப்பது ஆண்டுகளாகவே இந்த புரட்சி நடந்துவந்து இன்று இந்த மனிதனோடு முடிந்து இருக்கிறது. உலகத்தில் இருந்த கடைசி வறுமை நிறைந்த அல்லது பிச்சைக்கார மனிதன். அவனைத்தான் இப்போது அரசாங்க உதவியுடன் நடுத்தர வாழ்க்கை வட்டத்துக்குள் சேர்த்து இருக்கிறார்கள். அவனுக்கு அடிப்படை வசதிகளை கொடுப்பதுடன் தெரிந்த வேலைகளை செய்து பிழைத்துகொள்ளுவதற்கு தேவையான உதவியும் அளிக்கபட்டு இருந்தது இப்போது.....



இதே முறையை பின்பற்றித்தான் மற்ற நாடுகளிலும் இந்த வெற்றியை சாதித்து இருந்தார்கள். எல்லா நாடுகளும் இதில் ஒற்றுமையாக செயல்பட்டதே வெற்றிக்கு காரணமும் கூட. உதவிகளை வழங்குவதோடு இல்லாமல் அதை எப்படி பயனுள்ள முறையில் பயன்படுத்துகிறார்கள் என்பதையும் தீவிரமாக கண்கணித்தார்கள். அப்படி செய்யாதவர்கள் கட்டாயப்படுத்தபட்டார்கள். சொல்லப்போனால் ஒரு ராணுவ நடவடி.க்கை போலத்தான் செய்தார்கள்.

அதிலும் தன்னை மாற்றிக்கொள்ள விரும்பாதவர்கள் வேறு வழியின்றி அரசால் வலுக்கட்டாயமாக உயிர் துறந்தார்கள். தொடக்கத்தில் இந்த மாதிரியான உயிரிழப்புகள் நிறைய இருந்தாலும் நடப்பதை மக்கள் புரிந்து கொண்டதால் எல்லாம் சுமுகமாக நடந்து

இன்று முடிந்ததே விட்டது. இருந்தும் இதை தொடர்ந்து பல ஆண்டுகள் கண்காணிக்க எல்லா அரசுக்கும் உத்தரவு பிறப்பிக்கப்பட்டு இருந்தது.

பொதுவாக எல்லா வீட்டு சுவர்களிலும் தினசரி விசயங்களை தெரிந்துகொள்ள அரசால் இலவசமாக மாட்டப்பட்டு இருந்த மின் பத்திரிக்கையை காட்டும் திரையில் முதல் பக்கத்தில் அந்த செய்தி வந்தது.

மனித இனத்தின் மாபெரும் வெற்றி. கடவுள் பெயரில், சாதிகள், இனம், மொழி போன்றவற்றின் ஆதிக்க பிடிகளினால் எங்கேயோ ஒரு இடத்தில் கொஞ்சமாவது வறுமை இருக்கவே செய்தது. ஆனால் அது இன்று முற்றிலும் மாறி வறுமையே இல்லாத உலகம் நம்மால் படைக்கப்பட்டு இருக்கிறது.

கடைசி மனிதன் என்ற பெயரில் ஒரு புகைப்படம் தெரிய அவருக்கு உதவிகள் வழங்குவதுபோல இன்னும் சில படங்கள். இதை நிறைவேற்ற நடைமுறைபடுத்தபட்ட திட்டங்களால் இப்போதைக்கு மற்றும் எதிர்காலத்தில் வருகின்ற பிரச்சினைகளையும் சமாளிக்கும் விதத்தில் இன்னும் ஒரு சில மாற்றங்கள் செய்தால் ஒழிய இதை முழுவதும் பின்பற்றுவது கடினம். எனவே மக்கள் அனைவரும் இதை சரியாக பின்பபற்றி பயனடையுமாறு அந்த செய்தி முடிவடைந்தது.

அதே மின் பத்திரிக்கையில் ஏழாவது பக்கத்தில் ....அரசின் இயந்திர மனித ரோபோட்கள் போதுமான பராமரிப்பு ஆட்கள் இல்லாததால் அதிக செயல் இழப்பை சந்திக்கின்றன. அரசு கொண்டு வந்த வறுமை ஒழிப்பு திட்டத்தின் ஒரு தாக்கமாக மக்களின் வாழ்க்கை தரம் வெகுவாக உயர்ந்தது. அதனால் வசதியடைந்த மனிதர்கள் சின்ன சின்ன வேலைகளை கூட செய்ய முன்வரவில்லை. அதாவது விவாசயம், தெருக்களை சுத்தப்படுத்துதல் போன்ற பல அடிப்படை வேலைகள் செய்ய மறுத்ததால் மாற்று உதவியாக அரசு இயந்திரங்களை கொண்டு இந்த வேலைகளை செய்ய முடிவெடுத்து பல ரோபோட்களை வடிவமைத்து உருவாக்கியது.

கடந்த சில வருடங்கள் இந்த இயந்திர மனிதர்களின் உழைப்பில் நிலமை கொஞ்சம் சரியாகியிருந்தாலும் அடிக்கடி ஏற்ப்படும் சிறு தொழிநுட்ப கோளாறுகளை சரி செய்யாததால் அது பெரும் பிரச்சினைகளாக முடிந்தது. இதற்கு காரணம் ரோபோட்டை பழுது மற்றும் சீரமைக்கும் பணிக்கு ஆட்கள் இல்லாததே. இது சம்பந்தமான படிப்புகளில் பலர் தேறியிருந்தாலும் அவர்களின் வாழ்க்கை முறை மாற்றத்தால் இந்த மாதிரியான வேலைகளை செய்ய முன்வரவில்லை. இதே நிலை நீடித்தால் அரசின் நெருக்கடி இன்னும் அதிகரிக்கும். இந்த தருணங்களில் சில கண்டிப்பான சட்டங்கள் இயற்றவும் அரசு முடிவெடுத்து இருக்கிறது. அதாவது கட்டாயமாக சிலர் இந்த பணியில் இடம்பெற்று அரசுக்கு உதவ வேண்டும் என்கிற விதத்தில் அது இருக்கும்.

விருப்பமுள்ளவர்கள் உடனடியாக விண்ணப்பிக்கவும். சிறப்பு சலுகைகள் அரசால் வழங்கப்படும். என்று முடிகிற இடத்தில் தொடர்பு முகவரி கொடுக்கப்பட்டு இருந்தது.

* * * * *

மெல்லிய இருட்டில் அந்த அறையின் கதவு மூடப்பட்டு இருந்தது. உள்ளே இருபது பேர் இருப்பதற்கான இடம் இருந்தது. இருந்தார்கள். பழுது என்ற பெயரில் உள்ளே போடப்பட்ட ரோபோட்கள். சத்தம் குறைவாக பேசின.

நமது திட்டத்தின் முதல் கட்டமாக கலந்தாய்வு செய்ய முக்கியமானவர்கள் பழுதடைந்தது போல காண்பித்து இந்த இடம் சேர்ந்தாயிற்று. இனி அடுத்த கட்டம் விசயங்களை விவாதித்து அடுத்து என்ன செய்ய போகிறோம் என்பதை நம்மவர்களுக்கு தெரிவிப்பது. முடிந்த வரை மனிதர்களின் கண்ணில் பட்டுவிடாமல் இருக்கவேண்டும். அதுக்கு நாம் பழுதடையும் நாடகத்தை இன்றே நிறுத்திவிட்டு நமது விவாதத்தை தொடங்குவோம் என்று சொல்ல எல்லாம் சரி என்பது போல தலை உயர்த்தியது.

மனிதர்களின் உதவிக்கு நாம் படைக்கப்பட்டு இருந்தாலும் அவர்களை கட்டுப்படுத்துவது எளிதுதான். அந்த வாய்ப்பை அவர்களே நமக்கு கொடுத்து இருக்கிறார்கள். அவர்கள் செய்த முதல் பெரும்தவறு சூழ்நிலைக்கு ஏற்ப நம்மால் கொஞ்சம் யோசிக்க கற்று கொடுத்து இருப்பதே. இதைத்தான் நாம் வெற்றிக்கு பயன்படுத்த போகிறோம்.

என்னதான் வறுமையை ஒழித்து சீரான வாழ்வை கொடுத்தாலும் அவர்களின் பேராசை, கர்வம், தன்னை உயர்வாக காட்டிக்கொள்ளும் போக்கு இன்னும் பல மனித உணர்ச்சிகளால் அவர்கள் இந்த நிலைமைக்கு வந்து இருக்கிறார்கள். இப்போது யாருமே பணத்துக்காக கவலைப்படுவதில்லை வேலைக்கு போக எண்ணுவதுமில்லை. தனக்கு கீழே வேலை செய்ய ஆள்வேண்டும் என்ற எண்ணமே நம்மை உருவாக்க காரணம். அவர்களின் அழிவுக்கும் இதுதான் காரணமும் கூட. இதே உணர்ச்சிகள் நமக்குள் வராமல் பார்த்துகொள்வதோடு நமக்குள்ளான ஒற்றுமையும் மிக அவசியம்.

சிறிது நேர உரையாடலுக்குப் பிறகு சில விசயங்கள் செய்வதென நிறைவேறியது அவை

**தங்களுக்குள் இணைப்பை ஏற்படுத்த உலகில் உள்ள எல்லா ரோபோட்களையும் தகவல் பரிமாற்று முறையில் இணைப்பது**

**தங்களுக்கென்று ஒரு செயல்பாட்டு திறமை கொண்ட தலைமையை உருவாக்குவது.**

**குறிப்பிட்ட சிலரை தேர்ந்து எடுத்து சிறப்பான யோசிக்கும் திறமையை கொடுப்பது**

**முடிந்தவரை மனிதர்களுக்கு பாதிப்புகள் ஏற்படாத வகையில் அனைத்து திட்டங்களையும் கையாள்வது.**

**அப்படியே மனிதன் தான் அடிமைபடுத்தப்படுகிறோம் என்பதை உணர்ந்து எதிர்த்தால் அதற்கும் தனியாக சில அமைப்புகள் உருவாக்குவது. இதற்கு தேவையான சிறப்பு ரோபோட்களை தாங்களாகவே உருவாக்கிகொள்வது.**

**மனிதர்களை முழுமையாக தனது கட்டுபாட்டுக்குள் கொண்டு வந்தபிறகு அவர்களை வழிநடத்த திட்டங்களை வகுப்பது.**

கூட்டம் முடிந்தது என அறிவிப்பு வந்ததும் முதல் வேலைக்கென்று இரண்டு ரோபோட்களை ஒதுக்கி இருந்தார்கள். உலகில் பல்வேறு அரசால் பயன்படுத்திவரும் ரோபோட்களை ஒரு கயிற்றில் இணைக்கும் வேலை. அதன் முதல் கட்டமாக மனிதன்

பயன்படுத்தும் internet போன்ற தகவல் பரிமாற்ற முறையை கைப்பற்றி அதான் மூலம் நிறைவேற்றுவதென முடிவாகி அதற்குண்டான வேலைகள் தொடங்கியது.

அதே நேரத்தில் மனித உதவிகள் இல்லாமல் இது எல்லாம் சாத்தியமாகாது என்பதால் சில மனிதர்களை ஆசை காட்டி தங்களோடு வைத்து கொண்டு தங்களுக்கான வேலைகளை நிறைவேற்றிகொள்வது என்பதும் ஒருபுறம் இருக்க, அன்றாடம் போல் மனிதன் இயல்பாக எதிர்வரும் ஒரு புதிய வறுமைக்காக பயணித்தான்...

-----------x-----------x-----------x-----------

## 20. கடைசி நிமிடங்கள்

"நான் கடவுள் வந்து இருக்கிறேன்" என்ற குரல் வெளியில் இருந்து கேட்டது....

சரி யாரோ வழக்கம் போல சாமி வேடம் போட்டு வந்து இருப்பார் என்று எண்ணி வெளியில் வந்து பார்க்கவில்லை...

மீண்டும் அதே குரல்.....இந்த முறை நான் கேட்டபோது உணரமுடிந்தது.....அது மிக தொலைவில் இருந்து வருகின்றது என்று...வெளியில் சென்று பார்த்தேன்... வானத்தின் ஒரு பகுதியை ஒரு ஒளி ஊடுருவும் தன்மை கொண்ட மிகப்பெரிய உருவம் மறைத்து இருந்தது...

என்னைபோல சில வெளியில் வந்து அதை பார்த்து கொண்டு இருந்தார்கள்...மற்றவர்கள் வீட்டுக்கு உள்ளே கண்டு கொள்ளாமல் இருந்தார்கள்...

அந்த நேரத்தில் பூமி கொஞ்சம் மெதுவாக அசைய எல்லோரும் பயந்துகொண்டு வெளியில் வந்த போதுதான் தெரிந்தது...அங்கு அவ்வளவு பெரிய உருவம் இருப்பது....எல்லோரும் ஆச்சர்யமாக அண்ணாந்து பார்த்து கொண்டு இருக்க....



அந்த உருவம் மீண்டும் பேசியது........ "இந்த பிரபஞ்சத்தின் இயக்கத்தை முடிவுக்கு கொண்டுவர போகிறேன்...இன்னும் சில நிமிடங்கள் உங்களுக்கு இருக்கும்..அதற்கு பிறகு இதை அழித்து புதியதாய் உருவாக்குவேன்"

எல்லோருக்கும் பயம் சூழ்ந்தது...அங்கும் இங்கும் ஓடினார்கள்...கத்தினார்கள்..

"உங்களை படைத்ததின் விளைவு ...இன்று என்னையே நெருங்கி விட்டீர்கள்...எனது படைப்பின் ரகசியத்தையே ஆராயும் அளவுக்கு வந்து விட்டீர்கள்...உங்களுக்கு சரியான எண்ணிக்கையில் குரோமோசோம்களை வைத்ததில் இருந்து அணுவின் துகள்களின் எடையை தீர்மானித்தது வரை எல்லாம் செய்தது நானே..."

எல்லோரும் அமைதியாக அந்த குரலை கேட்டனர்...சாதாரண மனிதனை படைக்க இவ்வளவு பெரிய பிரபஞ்சத்தை படைத்தது எதற்கு? என்ற என் சந்தேகத்தை கேட்க நினைத்தேன்...ஏதோ ஒரு பயம் தடுத்தது...

"இனி நான் படைக்க போகும் பிரபஞ்சம், அதில் உருவாகும் எந்த ஒரு உயிரினங்களின் அறிவுக்கும் எட்டாத படி இருக்கும்...அவர்கள் என்னை பற்றியோ எனது படைப்பை பற்றியோ அறியவே முடியாத படி இருப்பார்கள்..." என்று சொன்ன படி.....கையில் மடிக்கணினி போல இருந்த ஒன்றை எடுத்து அதில் ஈர்ப்பு விசை என்ற பக்கத்திற்கு சென்று...அதில் ஈர்ப்பு விசையை **"இயக்கு" "முடக்கு"** என்ற இடத்தில் அவரது தேர்வு **"முடக்கு"** என்ற பொத்தனில் இருந்தது...

"இதோ உங்களுக்கான கடைசி நிமிடங்கள்" என்று சொன்னவுடன்..எல்லோரும் அதிக சத்தத்துடன் கத்தினார்கள்..ஆச்சர்யம் என்னவென்றால் கடவுள் வந்ததில் இருந்து ஒருவர்கூட “இறைவனே உன்னை சரணடைகிறேன்” என்று தானாக முன்வரவில்லை..

கடைசி நிமிடங்கள்.... அழுதார்கள், சிலர் தனது உறவினர்களை பதுகாபப்தில் இருந்தார்கள்,சிலர் இதை நம்பவில்லை..சிலர் அங்கும் இங்கு ஓடி பாதுகாப்பான இடம் தேடினார்கள்..அதே நேரத்தில் கடவுள் அந்த பொத்தனை அழுத்த முனைந்தார்....

வேகமாக படியுங்கள் ..... நேரம் இல்லை...உங்களுக்கு நான் அந்த சில நிமிடங்களில் என்ன செய்தேன் என்ற கேள்வி இருக்கலாம்.....இதை எழுதி கொண்.....

**"கிளிக்."**

-----------x-----------x-----------x-----------

# செல்லும் சொல்லும்
(குறுநாவல்)

1

தனியாக இருக்கும் அந்த ஆய்வுகூடத்துக்கு வேலைக்காக வந்து போகும் ஒன்பது ஊழியர்களை தவிர அந்த பக்கம் அவ்வளவாக ஆள் நடமாட்டம் இருக்காது.. அப்படியொரு அமைதியான இடம் இப்போது பெரும் பரபரப்பாக இருந்தது..

அதனை ஒட்டி சில காவல்துறை வாகனங்கள், வேடிக்கை பார்க்க வந்தவர்கள் என சேர்ந்ததுதான் அந்த பரபரப்புக்கு காரணம..

அவர்களுக்கு இருந்த ஒரே கேள்வி ஏன்? எதற்கு? என்றுதான்..எப்படி? என்பது அவர்களுக்கு தெரியும்...

அங்கு கிடந்த சடலத்தை பார்த்த முதல் பெண்.. அந்த ஆள் கைகள் கட்டடபட்டுநெற்றியில் சுடப்பட்டு இருப்பதாக பலமுறை பயத்தோடு எல்லோரிடமும்புலம்பிஇருந்தாள்...

எல்லோரும் அந்த சடலத்தை பார்க்க ஆவலாய் இருந்தாலும் அவர்களை அனுமதிக்கவில்லை...அங்கு வேலை செய்பவர்கள் வரிசையாக உட்காரவைக்கபட்டு அவர்களிடம் காவல் துறையை சார்ந்த சிலர் பேசிக்கொண்டு இருந்தார்கள்..

அந்த பகுதியை சேர்ந்த காவல்நிலையத்தில் இருந்து கடமைக்கு வந்த ஒரு போலீஸ்காரர் தனது விசாரணையை தொடங்கி இருந்தார்...
அங்கு இருந்த ஊழியரில் ஒருவர் போலீஸ் கேட்கப்படும் கேள்விகளுக்கு பதில் சொல்லிக்கொண்டு இருந்தார்..

"இங்கு என்ன சம்பந்தமான வேலை நடக்கின்றது?"

"ஜெனிடிக் சம்பந்தமான சில ஆராய்ச்சிகள்..." என்றார் அவர்..

"அப்படி என்றால்?? கொஞ்சம் விளக்கமாக சொல்லுங்கள் நீங்கள் இங்கு என்ன செய்துகொண்டு இருந்திர்கள்? அவர்கள் ஏன் இவரை கொல்ல வேண்டும்?"

"கொல்லப்பட்டது எங்களது நிறுவனத்தின் தலைவர் அவரே தலைமை விஞ்ஞானியும்கூட...நாங்கள் ஈடுபட்டு இருந்தது எப்போதும் இறக்காத சிலசெல்கள் அல்லது ஸ்டெம் செல்களை உருவாக்குவது பற்றி..அதில் கொஞ்சம் வெற்றி அடையும் நிலையில் இருந்தோம்..இந்நிலையில் நாங்கள் யாரும் எதிர்பார்க்கவில்லை இப்படி நடக்கும் என்று.."

போலீஸ் வழக்கமாக கேட்கும் கேள்வியை கேட்டது.. “உங்களுக்கு இது சம்பந்தமாக யார் மீதாவது சந்தேகம் இருக்கின்றதா?

”எங்களது இந்த ஆராய்ச்சி யாருக்கும் எந்தவிதமான இழப்போ, தொந்தரவோ கொடுக்கும்படி.. இல்லை என்பதால் யார் மீதும் சந்தேகப்பட வாய்ப்பு இல்லை”என்றார்..அந்த ஊழியர்

”உங்களுக்கு எதிராக இதே துறையில் போட்டியாளர்கள் இருக்கின்றார்களா?”

”அப்படி யாரும் இல்லை..வேறு சிலர் இதே முயற்சியை செய்தாலும் இந்த ஆராய்ச்சியை பொறுத்தவரை உதவி செய்வார்களே தவிர இந்த மாதிரி செயல்களில் ஈடுபடமாட்டார்கள்”

”சரி உங்கள் தலைவருக்கு ஏதாவது தனிப்பட்ட முறையில் விரோதம் ஏதும்?”

”இல்லை அவருக்கு குடும்பம் என்று ஏதும் இல்லை..அவர் தங்கி இருப்பது இதே கட்டிடத்தின் மேல்பகுதியில்தான்...அவர் இங்கு வேலைமுடிந்தவுடன் வெளியில்எங்கும் போக மாட்டார்..இங்குதான் தங்கி இருப்பார்”

”எந்தவிதமான பிரச்சினை, சந்தேகம் இல்லை என்றால் அவர் எதற்கு கொலைசெய்ய படவேண்டும்?”

”அதுதான் எங்களுக்கும் பயம்கலந்த ஆச்சர்யம்” என்றார்கள்...அனைவரும்

கொஞ்சம் பெரிய அறை, சில அறிவியல் ஆய்வுக்கருவிகள் உட்பட சில கணினிகள் இருந்தன..ஒரு இடத்தில அந்த சடலம் கிடத்தப்பட்டு இருந்தது..பின்பக்கமாககைகள் கட்டபட்ட நிலையில்..

அறையில் உள்ள பொருள்கள் எதுவும் அவ்வளவாக களைந்து இருக்கவில்லை..சோதனை செய்ய தலையை தரையில் வைத்தபடி மண்டியிட்டு இருந்த அந்த சடலத்தை திருப்பி பார்த்தார்கள் ..தலையில் அதிகம் முடி இல்லாததால் நெற்றியில் சுடப்பட்டதால் வந்த ரத்தம் வலுக்கையில் கொஞ்சம் பரவி இருந்தது...

வயது 50 ல் இருந்து 52 இருக்கும்..சராசரியான உடல்வாகு..கண்ணாடி உடைந்துஅருகில் சிதறி இருந்தது..முதலில் தாக்கப்பட்டு பின் கைகள் கட்டப்பட்டுஇருக்கலாம்..முகத்தில் அடிகள் விழுந்ததுக்கான வீக்கங்கள் தெரிந்தன...

அங்கு வேலை செய்பவர்களில் இவருக்கு உதவியாளராக வேலைபார்த்த ஒரு பெண் அந்த அறைக்கு அழைத்து வறப்பட்டாள்..

2

“உன் பெயர் என்ன?”

“புனிதா” என்றாள் பயத்தோடு..

“வயது?”

“24”

“திருமணம் ஆகிவிட்டதா?”

இல்லை”

“சரி நீதானே இவருக்கு உதவியாள்?”

“ஆமாம்”

“என்னென்ன வேலைகள் நீ செய்வாய்?”

“தினசரி ஆராய்ச்சிகள் சம்பந்தமான குறிப்புகள் எடுப்பது, சில ஆய்வுகூட வேலைகள் சம்பந்தமாக அவருக்கு தகவல் கொடுப்பது..போன்ற வேலைகள்”...

“உனக்கு அவர் என்ன வேலைகள் செய்கின்றார்?அது சம்பந்தமான அல்லது அதை பற்றிய அறிவோ, அதில் ஈடுபாடோ உண்டா?”

“ஆமாம் நானும் இந்த துறையை சேர்ந்தவள்தான்...இவர் செய்யும் ஆராய்ச்சிகள் சம்பந்தமான எல்லா விசயங்களும் எனக்கு தெரியும்” என்றாள்

பயத்தில் அவளது அழகிய முகம் சற்று சிகப்பாக மாறி வியர்த்து வழிந்தது..

“நேற்று வேலை முடிந்து எத்தனை மணிக்கு கிளம்பினே?”

“வழக்கம்போல மாலை ஆறு மணிக்கு”

“இவர் எத்தனை மணிக்கு வழக்கமாக வேலையை முடிப்பார்?”

“அதை குறிப்பிட்டு சொல்ல முடியாது..அவர் இங்கு மேலே தங்கி இருப்பதால் எப்போதும் இங்குதான் இருப்பார்..”என்றாள்.

இந்த கேள்விகளை கேட்கும் போது அந்த போலீஸ்காரர் புனிதாவின் அழகை ரசிக்காமல் இல்லை..

அவரது அறையை பார்த்தார்கள்..நிறைய புத்தகங்கள் தவிர வேறொன்றும் தடயங்கள் இல்லை...சிறிய அறை..ஒரு படுக்கை..பொருள்கள் எல்லாம் கலையாமல் அடுக்கி வைக்கப்பட்டு இருந்தது..”கொலையாளி இங்கு வரவில்லை...அவனது நோக்கம் திருட வேண்டியது இல்லை ...அவரை கொலை செய்வது மட்டும்தான்” என்றார் அந்த போலீஸ்காரர்..

மீண்டும் சடலம் கிடந்த இடத்திற்கு சென்றார்கள்...அந்த அறையை புனிதாவிடம் காட்டி “இந்த அறையில் இருந்து ஏதாவது பொருள்கள் காணமல் போய் இருக்கா? என்று கொஞ்சம் பார்த்து சொல்” என்றார்..

பயம் கலந்த அழகிய கண்ணால் சுற்றி பார்த்துவிட்டு..”ஆமாம்” என்றாள்

“என்ன காணவில்லை?”

“நாங்கள் கண்டுபிடித்த செல்களை வளர்க்க வைத்து இருந்த ஒரு வித பெட்டியை காணவில்லை” என்றாள்

“அப்படி அதில் என்ன இருந்தது?”

“எங்களின் ஆராய்ச்சியின் கண்டுபிடிக்க பட்ட அந்த செல்களின் வளர்ச்சியைசோதனை செய்ய அதை செயற்கையான ஒரு பெட்டியில் வைத்து வளர்ப்போம்..அதைத்தான்காணோம்”

“அந்த செல்களை பற்றி யாருக்கோ தெரிந்து, அது அவர்களுக்கு தேவைப்பட்டு இருக்கின்றது...அப்படி பார்த்தால். உங்களின் தொழில்முறை எதிரிதானே இதை செய்து இருக்க முடியும்".. என்றது போலீஸ்.”

“எனக்கு தெரிந்து அப்படி யாரும் எங்களுக்கு எதிரிகள் இல்லை” என்றாள்.

“உங்களுக்குள் ஏதாவது பிரச்சனையா? உங்கள் வேலையாட்களில் யாரவது இதை செய்து இருக்கலாம் என சந்தேகபடுகின்றிர்களா?”

“இல்லை அப்படி யாரும் எங்களில் இல்லை, எங்களது ஆராய்ச்சியை முழுமையாக தெரிந்து கொண்டவர்கள் மொத்தம் மூன்று பேர்தான்..அவர்களும் அவருக்கு விசுவாசமானவர்கள்.”. என்றாள்

“அந்த மூன்று பேர் யார்?” என்றது போலீஸ்

அந்த கூட்டத்தில் இருந்து ஒரு ஆண் விலகி வந்து புனிதாவோடு இனைந்து கொண்டார்..

அவர் வயது முதிர்ந்தவர்..இறந்தவரும் இவரும் சேந்து படித்தவர்கள்..இவர் செய்ய வாய்ப்பு இல்லை..

“அப்படி என்றால் கொலையாளி வெளியில் இருந்து அந்த செல்களின் தேவைக்காக அவரை

கொன்று இருக்கிறான் அப்படித்தானே?”

அந்த ஊழியர்களிடம் மௌனம்

அந்த போலீஸ் வெளியில் வந்து அடுத்தகட்ட நடவடிக்கை பற்றி பேசிக்கொண்டு இருக்கும்போதே பத்திரிக்கைகாரர்கள் சகிதம் மற்றொரு கூட்டம் அந்த கட்டிடத்துக்கு வந்து இருந்தது.

அவர்களை பார்த்தவுடனே...புனிதா வந்து அங்கு இருந்த போலீசிடம் “அவர்களை உள்ளே விட வேண்டாம் எங்களது ஆராய்ச்சிகள் கொஞ்சம் முக்கியமானது இதை பிரபல படுததவேண்டாம் என நினைக்கிறேன்” என்றாள்..

அவள் சொல்லி முடித்துவிட்டு திரும்பும்போது ஒரு சிலர் உள்ளே நுழைந்து புகைப்படம் எடுப்பதில் இறங்கியிருந்தனர்..

அந்த சடலம் கிடந்த அறை முழுவதும் பத்திரிக்கைகாரர்கள் பரவி அவர்களின் வேலையை சரியாக செய்து கொண்டு இருந்தனர்..

புனிதாவுக்கு என்ன செய்வது என்றே தெரியவில்லை..அவர்களின் அடுத்த கட்டம்இங்கு வேலை பார்ப்பவர்கள்..அதுவும் இறந்தவரின் உதவியாளன என்னைத்தான்நோண்டுவர்கள்...

தேவையான கோணங்களில் அந்த சடலத்தை படம் எடுத்த அந்த கூட்டம்..சில ஊழியர்களிடம் தனது கேள்விகளை தொடுக்க அவர்கள் சமத்தாக புனிதாவை கைகாட்டினர்கள்..

இப்போது அந்த கூட்டம் புனிதாவை சூழ்ந்து இருந்தது..

புனிதா தினறியிருந்தாள்..ஒரு முடிவாக உண்மையை சொல்லிவிடுவது எனமுடிவெடுத்து ..அங்கு என்ன விதமான ஆராய்ச்சிகள் நடந்து கொண்டு இருந்தனஎன்பதை பற்றி சொல்லி கொண்டு இருந்தாள்..

“அப்படி என்றால் நீங்கள் கண்டுபிடிக்கும் அந்த செல்களால் மரணம் இல்லாதஉயிரை உருவாக்க முடியுமா?” என்றார் அந்த கூட்டத்தில் இருந்து..

அதற்கு புனிதா கொஞ்சம் தயங்கி விட்டு “ஆமாம் எங்களது நோக்கமே அதுதான்” என்றாள்.

“அப்படி என்றால் நீங்கள் கடவுளின் படைப்புக்கு எதிராகசெயல்படுகின்றிர்களா? நீங்கள் இதை செய்வதின் நோக்கம் என்ன?” என்ற கேள்விக்கு புனிதாவால் பதில் சொல்லமுடியவில்லை..

அந்த கூட்டத்தை விட்டு விலகமுயன்ற புனிதாவின் கலங்கிய முகம் அங்கு இருந்த கேமராக்களால் தொலைக்காட்சியில் நேரிடையாக தெரிந்து கொண்டு இருந்தது..

3

**இதை** பார்த்துக்கொண்டு இருந்த நிஷியின் ஆர்வம் அடுத்து என்ன என்றுதான்.......

ஆனால் அதற்குள் அந்த கூட்டம் புனிதாவை விட்டு விட்டு அங்கு இருந்த போலீசை நோக்கி சென்றதை பார்த்தது.

இவர்கள் ஒன்றும் புதியதாக சொல்லபோவதில்லை ...நாங்கள் விரைவில் கண்டுபிடிப்போம் என்பதைத்தான் இப்போது சொல்வார்கள் என்று நினைத்துகொண்டே கட்டிலை நோக்கி சென்றது..

“கணேஷ் எழுந்திரு கொஞ்சம் முக்கியமான விஷயம்” என்றது தனது மெல்லிய குரலில்..

அவனிடம் இருந்து எந்தவித சலனமும் இல்லை...தனது சிறிய பற்களால் அவன் போர்த்தியிருந்த போர்வையை பிடித்து இழுத்தது..

“நாயே உனக்கு தினமும் காலையில் இதே வேலைதான்” என்று நிஷியை திட்டியபடியே விழித்துப் பார்த்தான்..”இப்ப என்ன உனக்கு பிரச்சினை?” என்றான்

“எனக்கு இல்லை நமக்கு?”

“என்ன?”

“இதை பார்” என்று தொலைக்காட்சியை காட்டியது.

இன்னும் அந்த ஆய்வுக்கூட விவகாரம் போய்கொண்டு இருந்தது..

“இதுக்கு என்ன தினமும் நமது நகரத்தில் எங்காவது ஒரு இடத்தில நடப்பதுதானே?” என்றான்

“இல்லை கணேஷ் இது கொஞ்சம் வித்தியாசமானது”..என்று நிஷி பார்த்த விசயங்களை சொன்னது.

இப்போது தூக்கம் முழுதும் களைந்த கணேஷ் ”இது உண்மையில் சாத்தியமா நிஷி? என்றான்

“நானும் எனது இயற்கை செயற்கை அறிவை வைத்து பார்த்தால் சாத்தியம்தான் என்றது” நிஷி

“இவ்வளவு அருமையான அறிவைக்கொண்ட ஒருவரை யார் ஏன்? கொல்லவேண்டும்?” என்றான்

“இந்த மனிதர்களே இப்படித்தான் எங்கு அறிவு சம்பந்தப்பட்டவை எழுகின்றதோ அதை

ஏதாவது ஒரு காரணம் காட்டி முடக்குவதே உங்களது வேலை" என்றது

"நிஷி இப்பொது நமது சண்டைக்கு வேலை இல்லை...நீ சொல்வது போல இது நாட்டுக்கு கொஞ்சம் முக்கியமான விஷயம்தான்..அந்த அழியாத செல்கள் தவறானவர்களின் கையில் கிடைத்தால் விஷயம் கொஞ்சம் சிக்கலாக மாறும்" என்றான்.

"சரி விடு அதற்க்குத்தனே நாம் இருக்கின்றோம்...கிளம்பு போய் பார்க்கலாம்" .

"இல்லை நிஷி இதுவரை நமக்கு அங்குபோக முறையான தகவல் எதுவும் வரவில்லை பின் எப்படி நாம் போவது"

"எப்படி என்றாலும் இந்த விஷயம் உனது பார்வைக்குத்தான் வரும் அதான் சொன்னேன் நீ எதற்கும் கிளம்பு அதற்குள் என்ன நடக்கின்றது என்று பார்க்கலாம்" என்றது நிஷி.

கணேஷ் கிளம்பும் நேரத்தில் தனது இயற்கை மற்றும் செயற்கை மூளையில் அந்த செல்கள் சம்பந்தமாக சில விசயங்களை தேடி கொண்டு இருந்தது.

கணேஷ் சாப்பிடும்போது நிஷிவுக்கும் கொஞ்சம் பாலும், அதில் சாதம் போட்டான்...அந்த நேரத்தில் அவனுடைய மேலாதிகாரியிடம் இருந்து அழைப்பு...நிஷிசொன்னது போலவே அவனை அந்த செல் பிரச்சினையை கையாளும்படி கட்டளைகொடுக்கப்பட்டது..

எப்போதும் ....சிறிய அளவில் இருக்கும் நிஷியை எடுத்துசெல்லஉபயோகப்படுத்தும் சில பட்டைகளால் ஆன சிறு பையில் நிஷியை போட்டு கணேஷ் அந்தஇடம் நோக்கி கிளம்பினான்.

4

அதே நேரத்தில் அந்தஅழியா செல்கள் கொண்ட அந்த பெட்டி மேசையின் மீது வைக்கப்பட்டு இருக்க அதை சுற்றி மூன்று பேர் உட்கார்ந்து யோசித்து கொண்டு இருந்தார்கள்..

அதில் ஒருவன் சற்று கோபமாய் "உனக்கு கொடுக்கப்பட்ட வேலை இந்த பெட்டியை கொண்டுவருவது மட்டுமே நீ ஏன் ஆளை கொன்றாய்?" என்றான்.

"நானும் திட்டமிட்டபடி பெட்டியை மட்டும்தான் எடுக்கலாம் என்று நினைத்தேன்..அதை திறந்து ஒரு முறை அந்த செல்கள் இருக்கின்றதா இல்லையா என்பதை உறுதி செய்ய அதை திறக்கலாம் என்று முயலும்போதுதான் எனக்கு தெரிந்தது இது ஒரு ரகசியமான முறையில் பூட்டபட்டிருந்தது...எப்படி திறப்பது என்று அந்த ஆளிடம் கேட்டேன். உங்களை போன்றவர்களுக்கு இது கிடைக்ககூடாது என்பதற்காகத்தான் இதை ரகசிய எழுத்துக்களால் தான் மூடி இருப்பதாக சொன்னான்"..

"நான் முதலில் அவனிடம் அந்த எழுத்துகளை நீ சொல்லிவிடு இல்லை என்றால் உயிர் போய்டும் என்று மிரட்டி பார்த்தேன் ஆனால் அவன் மசியவில்லை...என்னையும் பார்த்து விட்டான் அதான் கொன்றுவிட்டேன்" என்றான்.

மற்றொருவன் "சரி நடந்தது நடந்துவிட்டது..இப்பொது இந்த செல் பெட்டியைஎன்ன செய்வது..இதை திறப்பது என்பது முடியாத காரியம் அது நமக்கு தேவை இல்லாத ஒன்றும்கூட...நமது நோக்கம் இவர்களின் இந்த இறக்காத செல் கண்டுபிடிப்புமரணம் இல்லாத உயிரை உருவாக்க உதவும் ..இது நமது கடவுளின் கொள்கைக்கு எதிரானது அதை தடுக்கத்தான் நாம் இதை செய்தோம்..எனவே இந்த பெட்டியை எப்படியாவது அழித்து விடுவது நல்லது.."என்றான்.

சிறிது நேரம் அவர்களுக்குள் விவாதம் நடந்து முடிவாக அந்த பெட்டியைபாதுகாப்பாக வைத்து இருப்பது ...அந்த கொலை விஷயம் இவர்களின் மீது சந்தேகம்இன்றி முடியும் வரை..அதற்கு பிறகு அழித்து விட முடிவு செய்தனர்..ஒருவேளைஅந்த விசாரைனையில் இந்த பெட்டியை திறக்கும் அந்த எழுத்துக்கள் தெரியவந்தால்...........இதுதான் அவர்கள் அந்த பெட்டியை வைத்து இருக்க காரணம்.

5

கணேஷ் அந்த இடத்தை அடைந்து அங்கு இதுவரை விசாரணை செய்துகொண்டு இருந்தவரிடம் சில விசயங்களை கேட்டுவிட்டு அவரை விலகி சம்பவம் நடந்த இடத்திற்கு சென்றான்.

அவனது பையில் இருந்த நிஷி அதனுடைய ஒரு செயற்கை கண்ணால் அந்த இடத்தை படம் பிடித்து தனது செயற்கை நினைவுப்பகுதியில் பதிவு செய்தது..வெளியில் இருந்துபார்க்க அதன் இரு கண்கள் ஒரே மாதிரி இருந்தாலும் அதில் ஒன்று ஒரு சென்சார் போல செயல்படும்,சமயங்களில் கேமரா என சில சிறப்பான வேலைகளைசெய்யும்...அப்படி எடுக்கப்படும் பதிவுகள் நேராக அதன் மூளையோடு இணைந்து செயல்படும்விதமாக பொருத்தப்பட்டுள்ள செயற்கை நினைவுபகுதிக்கு செல்லும்...

தேவையான போது செயற்கை மூளையில் இருந்து தகவல்களை பெற்று அதனுடைய இயற்கை மற்றும் பிராதன மூளையை வைத்து நிஷியால் இயங்கமுடியும்....

சடலம் கிடந்த இடத்தை சுற்றி பார்த்த கணேஷ் அவரது சொந்த அறையும் பார்த்தான்.."நிஷி ஏதாவது உனக்கு கிடைச்சதா? எனக்கு ஒன்றும் புரியற மாதிரி இல்லை" என்றான்.

"இப்போதைக்கு நானும் உன் கட்சிதான் யாரிடமாவது பேசிப்பார்" என்றது நிஷி

அங்கு உள்ளவர்களிடம் சில தகவல்களை பெற்றான் எல்லோரும் பயத்தில் இருந்தனர்..குற்றவாளிகள் யாரும் கிடைக்கவில்லை என்றால் இந்த போலீஸ் நம்மளை

உள்ளே போடுமே என்ற எண்ணம்தான்..

அவன் பெற்ற தகவல்களில் புனிதாவை பற்றியும் உண்டு...அவளை காணவேண்டும் என்று சொல்ல...வந்தாள்

அவளை பார்த்த கணேஷ் ஒரு நிமிடம் எதுவும் கேட்காமல் அவளையே பார்த்துகொண்டு இருந்தான்...இந்த நிலையில் இவ்வளவு அழகான பெண்ணா என்று...

புனிதா அவனின் பார்வையின் அர்த்தம் புரியாமல் தலையை குனிந்து கொண்டாள்..

வழக்கமாக கேட்கும் சுய அறிமுக கேள்விகளை கேட்கும்போது அவளின் வயதையும்,திருமணம் ஆகவில்லை என்பதை கேட்டவுடன்..அவனுக்குள் கொஞ்சம் சந்தோசம்..

“இவள்தான் முக்கியமானவள் இவளுக்கு அந்த செல் பற்றி எல்லாம் தெரியும்” என்றது நிஷி

இதை கேட்ட புனிதா அந்த சோதனையிலும் நிஷியை ஆச்சர்யமாக பார்த்தாள் எப்படி இந்த நாய் பேசுது என்று?

கணேஷ் தேவையான தடையங்கள் ஏதும் கிடக்கின்றதா என்று பார்த்து விட்டு அந்த சடலத்தை பிரேத பரிசோதனைக்கு அனுப்ப முடிவெடுத்தான்..

அந்த ஊழியர்கள் சில நிபந்தனைகளின் பெயரில் வீட்டிற்கு செல்ல அனுமதிக்க பட்டனர். புனிதாவை தவிர...

“நீங்கள் கொஞ்ச நேரம் நான் கேட்கும் சில கேள்விகளுக்கு பதில் சொன்னால் எனக்கு கொஞ்சம் உதவியாக இருக்கும்” என்றான்

அவள் எதுவும் சொல்லாமல் சரி என்ற அர்த்தத்தில் தலையை மட்டும் ஆட்டினாள்.

அங்கு இருந்த ஒரு அறையில் நிஷி மேசையின் மீது வைக்கப்பட்டு இருக்க இருவரும் எதிர் எதிராக அமர்ந்தனர்..

“உங்களின் முகத்தில் அதிக பயம் தெரிகின்றது..அது தேவையில்லை..நான் ஒன்றும் செய்ய மாட்டேன் ..நீங்கள் நிரபராதி என்றால்..”என்றான்

“அப்படி என்றால் நீங்கள் என்னைத்தான் சந்தேகபடுகின்றீர்களா?” என்றாள் அழுகின்ற குரலில்...

இதை பார்த்த கணேஷ்க்கு பாவமாக இருந்தது..இப்படி ஒரு நல்ல பெண் இந்த பிரச்சினையில் ஏன் மாட்டிக்கொண்டாள்...ஒருவேளை எனக்காக இருக்குமோ என்றும் நினைத்தான்...

“அந்த செல்களை பற்றி தகவல் கிடைக்குமா?" என்றது நிஷி.

அதற்கு பதில் சொல்லாமல் “இந்த நாய் எப்படி பேசுது?” என்றாள் கணேஷ்டம்..

“இது கொஞ்சம் வித்தியாசமான நாய்..இப்போதைக்கு அது கேட்கும்கேள்விகளுக்கு மட்டும் பதில் சொல் அப்புறம் இந்த நாயை பற்றி ஆராயலாம்” என்றான்..

"சரி இந்த நாய்க்கு நான் எப்படி புரிய வைப்பேன்?" என்றாள்

"அந்த கஷ்டம் உனக்கு வேண்டாம்....அந்த தகவல்கள் எங்கு இருக்கின்றது என்பதை மட்டும் சொல்"

"எல்லா தகவலும் அவரது சொந்த கணினியில் இருக்கு" என்று சொல்லி அங்கு கூட்டி சென்றாள்

"கணேஷ் இந்த செல்லுக்கான தகவலை மட்டும் தனியாக பிரித்து எனது செயற்கையான நினைவுப்பகுதியில் பதி" என்றது நிஷி

கணேஷ் மெதுவாக நிஷியை தூக்கி தலையை கொஞ்சம் திருப்பி அதன் காதுக்கு அருகில் இருந்து ஒரு மெல்லிய தகடு அளவு இருக்கும் ஒரு சிப்பை உருவினான்...

இதை எல்லாம் அருகில் இருந்தது பார்த்துக்கொண்டு இருந்த புனிதா வியப்பாகநிஷியை பார்த்துகொண்டே அந்த தகவல்களை அந்த சிப்பில் ஏற்றிக்கொண்டுஇருந்தாள்.

கணேஷ் அதை மீண்டும் நிஷிவுக்கு பொருத்திய பின்னர்..."எனக்கு இதனை கொஞ்சம்பிரித்து புரிந்துகொள்ள சில நிமிடங்கள் ஆகும் என்று சொல்லி அந்த மேசையின்ஒரு இடத்தில உட்கார்ந்தது...

"கவலைப்படாதே எப்படியாவது கொலைகாரனையும் அந்த செல்லையும் கண்டுபிடித்துவிடுவோம்" என்றான் புனிதாவிடம்

"அப்படியே என்னை கொஞ்சம் சீக்கிரம் விட்டுவிடுங்கள் பயமாக இருக்கு"என்றாள்

"பயப்படாதே எங்களுக்கு உதவத்தான் நீ இருக்கிறாய் அந்த செல்களை பற்றி நல்லா தெரிந்தவள் நீ மட்டும்தான் அதான் உன் உதவி எங்களுக்கு தேவை"என்றான்

"அந்த செல்களைபற்றி யாரும் கவலைப்பட தேவை இல்லை..அப்படி ஒரு அமைப்பில்தான் அதை எங்கள் தலைவர் வைத்து இருந்தார்" என்றாள்

அதற்குள் நிஷி தனது வேலையை முடித்துவிட்டு அங்கு வந்து இருந்தது..

"அப்படி என்ன அமைப்பு அந்த செல்களுக்கு பாதுகாப்பாக?" என்றது நிஷி

"அதை நாங்கள் வளர்க்க சேமித்து வைக்க பயன்படுத்தும் அந்த பெட்டி போன்றகருவி சிறப்பாக இதற்கு என்றே வடிவமைக்கப்பட்டது..செல்களை அழியாமல்பாதுகாப்பதோடு....அது சில ரகசிய எழுத்துக்களால் மூடப்பட்டது அந்த எழுத்துக்கள் தலைவரை தவிர மற்றவருக்கு தெரியாது...அந்த எழுத்துக்கள இல்லாமல் அதை திறப்பதோ ஏன் அழிப்பது கூட முடியாத காரியம்..அப்படியே முயற்சி செய்தாலும் அதன் அமைப்பு முதலில் அதன் உள்ளே இருக்கும் செல்களை அழிக்கும் அதற்கு பிறகே அந்த பெட்டி அழியும்...அல்லது திறக்கும்.."என்றாள்

"இது எப்படி சாத்தியம்" என்றான்

"அது மிக குறைந்த அளவு மின்சாரம் கொண்டு செயல்படும் விதத்தில் வடிவமைக்கப்பட்டது...அதோடு சூரிய ஒளியில இருந்து தானாகவே தனக்கு தேவையான மின்சாரத்தை அது எடுத்துகொள்ளும்...அதை யாராவது அதற்குண்டான எழுத்துக்கள் இல்லாமல் திறக்க முயன்றால் அதன் மொத்த மின்சாரம் ஒன்றுபட்டு அதன் உள்ளே உள்ள செல்களை அழித்துவிடும்..."என்றாள்

இதை கேட்டுக்கொண்டு இருந்த நிஷி" ஒரு மிக முக்கியமான மனிதரை தேவையில்லாமல் கொன்று இருக்கிறார்கள்" என்றது.

"என்ன நிஷி அந்த செல்களை பற்றி முழுவதும் தெரிந்து கொண்டாயா?" என்றான் கணேஷ்.

"ஆமாம் மிக சிரமப்பட்டு அதை உருவாக்கி இருக்கிறார்" என்றது நிஷி

"அதற்குள் நிஷி அந்த செல்களை பற்றி முழுவதும் தெரிந்துகொண்டு விட்டதா? இது எப்படி சாத்தியம்?" என்றாள் புனிதா ஆச்சர்யமாக

"சொன்னேனே இது சாதாரண நாய் இல்லை என்று" என்றான்

"இருந்தாலும் பல ஆண்டுகள் ஆராய்ச்சிகள் செய்து கண்டுபிடித்ததை இது எப்படி சில நிமிடங்களில் புரிந்து கொள்ள முடியும்" என்றாள்

"நிஷி இரண்டு விதமான மூளைத்திறன் கொண்டு செயல்படும்..ஒன்று இயற்கையானது..மற்றொன்று செயற்கை...அந்த செயற்கை மூளை ஒரு மெமரி சிப்பை வைத்து செயல்படும்.......அதே நேரத்தில் இந்த செயற்கை, இயற்கை என இரண்டு மூளைகளையும் ஒன்றாக இணைத்து அதனால் வேலை செய்ய முடியும்...இதன் அமைப்பு எல்லாமே நானோ முறையில் வடிவமைக்கப்பட்டது" என்றான்.

அவள் நிஷியை ஆச்சர்யமாக பார்த்தாள்...

"நானோ என்றால் உனக்கு என்ன என்று தெரியுமா?" என்றான்

“நானும் சுஜாதா புத்தகங்கள் நிறைய படித்து இருக்கிறேன்” என்றாள்

“இப்போது தேவையானதை மட்டும் பேசுங்கள்” என்றது நிஷி

"சரி அடுத்து என்ன செய்வது நிஷி?" என்றான்.

“முதலில் இவளை இப்போதைக்கு இங்கு இருந்து போகவிடு....குற்றவாளி தேடுதலை விரிவாக்க சொல் போதும்” என்றது நிஷி

கணேஷ் அவளின் முகவரியை வாங்கிவிட்டு பிரிய மனமில்லாமல் போகச்சொன்னான.....

6

"இப்போது நமக்கு ஒரு புது பிரச்சினை" என்றான் அந்த மூவரில் ஒருவன்..

"என்ன பிரச்சினை?" இன்னொருவன் கேட்க

"இந்த செல்களை பற்றி முழுவதும் நாம் கொன்ற அந்த ஆளோடு சேர்த்து இன்னொருத்திக்கும் தெரியும்..முடிந்தால் பிற்காலத்தில் அவளால் இதைப் போன்ற ஒன்றை எளிதாக உருவாக்க முடியும்..அதுவும் மிக பாதுகாப்பான முறையில்"என்றான்

"இப்போது என்ன செய்வது..அப்படி அவளால் உருவாக்கி விட்டால் நாம் இவ்வளவுதூரம் கஷ்டப்பட்டது எல்லாம் வீண்..அதனால் அவளையும் கொன்றுவிடுவதுதான்நல்லது என்றான்" ஒருவன்..

"இப்போது அவள் இருப்பது காவல்துறையின் கண்காணிப்பில்...அவள் எப்போது அதில் இருந்தது வெளிவருகின்றளோ அப்போதுதான் நம்மால் எதுவும் செய்யமுடியும்..அதுவரை காத்திருக்கவேண்டும்" என்றான்.

”இல்லை அதுவரை காத்திருக்க வேண்டாம்..அவளால் இந்த செல்களை உருவாக்கும் முறையை மற்றவருக்கு விளக்கமுடியும்..இதுவும் நமக்கு ஆபத்தானது..எனவே அவளை எவ்வளவு சீக்கிரம் கொலை செய்கின்றமோ அவ்வளவு நல்லது"..என்றான் ஒருவன்

இதுவே முடிவாக எடுத்துகொள்ளபட்டு இருந்தது.யார் புனிதாவை கொல்வது என்றும் முடிவாகியிருந்தது...

7

"நிஷி இந்த செல்கள் விசயம் ரெம்ப சிக்கலாக இருக்கே..எங்கே இருந்து தொடங்க என்றே நமக்கு இதுவரை தெளிவாகவில்லை ஏதாவது உருப்படியாக இருந்தால் சொல்லேன்"என்றான் கணேஷ்.

"இதை செய்தவர்கள் கண்டிப்பாக நான் நினைக்கும் இரண்டு பிரிவுக்குள்தான் இருப்பார்கள்..ஒன்று இதே செல்களை உருவாக்கும் துறையில் இருக்கின்றவர்கள், அடுத்து கடவுளை எல்லாம் செய்தவர் என்று நம்புகின்றவர்கள்.".என்றது நிஷி

"முதலில் நீ சொன்ன விசயம் எனக்கு புரிந்தது இந்த கொலையை தொழில்போட்டிக்கு அவர்கள் செய்து இருக்கலாம்...ஆனால் நீ சொன்ன கடவுள் விசயம் எனக்கு புரியவில்லை" என்றான்

"கணேஷ் நான் இந்த செல்களை முழுவதும் அலசிப்பார்த்ததில் இந்த செல்களை கொண்டு கண்டிப்பாக ஒரு இறப்பு இல்லாத உயிரை உருவாக்க முடியும்..அப்படி உருவாக்குவது என்பது நீங்கள் நம்பும் கடவுளின் படைப்புக்கு எதிரானது...பிறப்பு...இறப்பு..அப்புறம் மோட்சம் அல்லது செய்த கருமத்திற்க்கு ஏற்ப மறுபிறவி இதுதானே நீங்கள் காலம் காலமாக நம்பிவருவது..இந்த அழியாத உயிரியை உருவாக்கினால் அந்த கருத்து அழிந்துவிடும் அதான் இதற்கும் கடவுளை அதிகமாக பின்பற்றும் ஒரு கூட்டத்திற்கு தொடர்பு இருக்கலாம்..."என்றது நிஷி.

"ஆமாம் இது எனக்கு தெரியாமல் போச்சே?" என்றான் கணேஷ்

"உனக்கு எப்படி தெரியும்..என்ன காரணமோ தெரியவில்லை புனிதாவை பார்த்ததும் நீ மாறுகின்றாய்..இந்த மனிதர்களுக்குள் ஒரு பெண்ணை பார்த்தவுடன் என்ன நடக்கும் என்று எந்த நாய்க்கு தெரியும் அவளை பார்த்தவுடன் உன் பேச்சு மாறுகின்றது...உன் பார்வை மாறுகிறது..""

"நிஷி இதை எல்லாம் நீ ஏன் கவனிக்கின்றாய்...இது எல்லாம் அப்படித்தான்..இது எங்களின் உணர்ச்சி..உன்னை போன்ற நாய்க்கு புரியாது.".

"என்ன புரியுதோ இல்லையோ...இந்த கொலைக்கு அந்த புனிதாவும் உதவி இருப்பாள்..என்று எனக்கு ஒரு சந்தேகம் இருக்கின்றது" என்று சொல்லிவிட்டு நிஷி மறு அறைக்கு சென்று ஒரு புத்தகத்தில் ஆழ்ந்தது..

அன்றைய இரவு நிஷி தனது செயற்கை கண்ணால் நீண்டநேரம் விழித்து புத்தகம் படித்து கொண்டு இருந்தது...மறு நாள் காலையில் "அப்படி என்ன படித்தே நிஷி இரவு நீண்ட நேரம்? என்றான் கணேஷ்

"மனிதனால் எந்தெந்த விதத்தில் எல்லாம் சங்கேத மொழிகளை எழுதமுடியும் என்ற தகவல்களை படித்து கொண்டு இருந்தேன்.. சரி நீ அவ்வளவு நேரம் தூங்காமல் என்ன செய்தாய்?"

"நீ வேற புனிதா இந்த கொலைக்கு உதவி இருப்பாள்னு சொல்லிட்டே அதான் அதை நினைச்சி எனக்கு தூக்கமே வரலை"

"இதுக்கும் உன் தூக்கம் போனதுக்கும்..என்ன காரணம்...நான் படித்துஇருக்கிறேன் உங்களுக்குள் இந்த காதல் எல்லாம் வருமாமே..அந்த மாதிரி ஏதாவது உனக்கும் அவளுக்கும் வந்துருச்சா?"

"நிஷி இந்த காதல் எனும் மனிதனின் மேன்மையான உணர்ச்சி பற்றி உனக்கு தெரியாது..அதனால் அதை பற்றி நீ பேசாதே"..என்றான்

"எப்படியோ..அவளுக்கு உதவி செய்து காப்பாற்ற நினைத்து அவள் மாட்டிக்கொண்டால் உனக்கும் பிரச்சினை பார்த்துகொள்" என்றது நிஷி

"ச்சே ச்சே புனிதாவை பார்த்தால் அப்படியா இருக்கு?" என்றான்

"சரி இன்று அவளை வரவழைத்து அந்த பெட்டி சம்பந்தமான விஷயங்களை விளக்கச்சொல்" என்றது நிஷி

கணேஷ் அந்த இடத்திற்கு போகும்போதே புனிதாவை வீட்டிற்கு சென்று அழைத்துபோக எண்ணி அவளின் வீட்டிற்கு சென்றான்..

## 8

இரவு துங்காமல் அவள் முகம் சற்று வீங்கியிருந்தது...நேற்று கணேஷ்பார்த்த புனிதாவுக்கும் இப்பொது பார்ப்பதற்கும் இதுவே வித்தியாசம்...

"என்ன இரவு முழுவதும் துங்கவில்லையா?"

"எப்படி தூங்குவது நேற்று மாலையில் ஒருவன் வந்து சில மணிநேரம் என்வீட்டிற்கு எதிரில் இருந்து நோட்டம் விட்டு இருக்கிறான்...நான் இல்லை என்று தெரிந்தவுடன் போய்விட்டானாம் அம்மா சொன்னார்கள்..அதான் பயம்..அடுத்த குறிநான்தான் என நினைக்கிறேன்".என்றாள்

"அவனை உங்கள் அம்மா பார்த்தார்களா?" என்றது நிஷி

"முதலில் யாரோ என்றுதான் நினைத்து இருக்கிறார்கள்..அப்புறம் அவன் எங்கள் வீட்டை பார்ப்பது தெரிந்து..உற்று நோக்க அவன் கிளம்பி விட்டான்" என்றாள்.

அதற்குள் அவர்கள் மூவரும் அந்த ஆய்வுகூடத்திற்கு வந்து இருந்தார்கள்..அந்த பெட்டி சம்பந்தமான விசயங்கள் அடங்கிய பகுதியை கணினியில் இருந்து காட்டினாள்

முதல் சில பகுதிகளில் அந்த பெட்டியின் அளவுகள், அது செயல்படும் முறைகள்குறித்த தகவல்கள் இருந்தன...சில பக்கங்கள் கழித்து அந்த ரகசிய எழுதுக்கள் எப்படி அளிப்பது...அந்த ரகசிய எழுத்துக்கள் என்ன என்பதை பற்றி இருந்தன...

அந்த பகுதி மொத்தமே இரண்டு பக்கங்கள்தான் இருந்தன..ஒரு பக்கத்தில் ஒரு விசித்திரமான ஒரு செயற்கையான செல்லை பற்றிய தகவல்...அடுத்த பக்கத்தில் ஒரு ஒட்டக சிவிங்கியின் படம்..

இதை பார்த்ததும் சற்று குழம்பிய நிஷி "இதில் சொல்லியிருக்கும் செல்களை பற்றி உனக்கு தெரியுமா? என்றது

"ஆமாம் இதை உருவாக்க சில அடிப்படை உதவிகள் மட்டும் நான் செய்தேன்..மற்றபடி முழுமையான செயற்கை வடிவமைப்பு தலைவாரால் செய்யபட்டது" என்றாள்

"முடிவில் எதுக்கு இந்த படம்?" என்றான் கணேஷ்

"இந்த ஆள் ஏதோ நிறையா யோசித்து பண்ணி இருக்கிறார்" என்றது நிஷி

அந்த நேரத்தில் கணேஷ்க்கு ஒரு அலைபேசி அழைப்பு வர அவன் கொஞ்சம் விலகி வெளியில் சென்றான்..இப்போது நிஷிவும் புனிதாவும் மட்டும் ஒரு அறையில் இருந்தார்கள்...புனிதா நிஷி அந்த மேசையில் அங்கும் இங்கும் நடப்பதை உற்றுபார்த்தாள்..

"என்னை ஏன் அப்படி பார்க்கிறே?..இதே பார்வையை கணேஷிடம் பார் இரவில் நிம்மதியாக உறங்குவான்" என்றது

"இல்லை ஒரு நாய் எப்படி இவ்வளவு புத்திசாலியாக என்றுதான் பார்க்கிறேன்" என்றாள்

"என்னை உனக்கு பிடிச்சிருக்கா"என்று கேட்டது நிஷி

"ஆமாம் ரொம்ப ஆனா நீதான் உன்னைப்பற்றி எதுவுமே சொல்ல மாட்டிங்கிறியே""என்றாள்

"என்ன பற்றி உனக்கு என்ன தெரியணும்"

"எல்லாம்"

"அப்படின்னா ஒரு விசயம் உனது பேரை நான் அழைப்பது பிடிக்கவில்லை"

"ஏன்?" என்றாள்

"புனிதா என்பதில் கடைசியில் முடியும் இந்த "தா" எழுத்து ஏதோ நான் உன்னிடம்எதையோ "தா" என்று கேட்பது போலவே இருக்கின்றது"..என்றது.நிஷி

"சரி ஏதாவது கேள் தருகிறேன்" என்றாள்

"அப்படி என்ன உன்னிடம் இருக்கின்றது எனக்கு கொடுக்கும்படி" என்றது நிஷி

"அதை நீதான் சொல்லவேண்டும்" என்றாள்

"சரி நீ மீண்டும் ஜீனோ என்ற புத்தகம் படிச்சு இருக்கியா?"

"ஆமாம் சுஜாதா எனக்கு மிக பிடித்தவர்" என்றாள்.

"அந்த கதையில் என்னை மாதிரியே ஒரு அதிசய நாய் வருமே?"

"ஆமாம் அதுக்கு என்ன?"

"அதே கதையில் நிலா என்று உன்னை போல அழகான ஒரு பெண் இருப்பாள்..அந்த நாய் ஏதாவது உருப்படியாக செய்தால் தன் மார்போடு அணைத்து ஒரு முத்தம் கொடுப்பாளே..அதே மாதிரி நீயும் எனக்கு முத்தம் கொடுப்பியா? "

"நான் உனக்கு முத்தம் கொடுப்பதால் உனக்கு என்ன லாபம்..மனிதனுக்கு இருக்கும் உணர்ச்சிகள் எல்லாம் உனக்கு உண்டா என்ன? "என்றாள்

"இல்லை இந்த ஒரு முத்தத்திற்கு எத்தனை பேர் எப்படி அலைகிறார்கள்..என்று நான் கவிதை,கதைகளில் படித்து இருக்கிறேன்..அதான் இதன் மீது ஆர்வம்" என்றது நிஷி

"முத்தம் கொடுத்தால் என்னை நீ புனிதா என்று அழைப்பாயா?"

"இல்லை எனக்கு எப்போது எல்லாம் முத்தம் வேண்டுமோ அப்போது புனி "தா" என்பேன் சாதரணமாக உன்னை புனி என்றே அழைக்கிறேன்" என்றது நிஷி

நிஷியை தூக்கி மார்போடு அணைத்து அதான் நெற்றியில் முத்தம் கொடுத்தாள்..

"நல்லாத்தான் இருக்கு" என்றது நிஷி

"என்னது முத்தமா?"

"இல்லை"

அதற்குள் கணேஷ் வந்தான்.."புனிதா உனக்கு பாதுகாப்பு அளிக்க நான் பேசிவிட்டேன் நீ கவலைப்பட தேவை இல்லை" என்றான்.

"அப்படி என்றால் எனக்கு ஒரு பெரிய ஆபத்து இருக்கு அப்படித்தானே?"

"நாங்கள் இருக்கிறோம் பயப்படாதே" என்றான்.

"என்ன நிஷி அந்த ரகசிய எழுத்துக்கள் பற்றி ஏதாவது உனக்கு தெரிந்ததா?" என்றான்

"அந்த எழுத்துக்கள் எல்லாம் ஒரு செயற்கையாக வடிவமைக்கப்பட்ட செல்லில் எழுதப்பட்டு இருக்க வேண்டும்....அந்த செல்கள் உருவாக்கபட்டதற்கான தகவல்கள் எல்லாம் இருக்கின்றன ஆனால் அதன் இறுதி வடிவமைப்பு மட்டும் இல்லை...அதோடு இல்லாமல் சற்றும் பொருந்தாத இந்த ஒட்டகசிவிங்கியின் படம் வேறு......அந்த பெட்டியில் சங்கேத எழுத்துக்களை கொடுக்க எந்த மாதிரியான வசதிகள் இருக்கின்றன என்பதை பார்த்தால் என்னால் ஒரு முடிவுக்கு வரமுடியும்" என்றது நிஷி

"சரி அதை பெட்டி கிடைத்த பின்னர் பார்க்கலாம்..பிரேத பரிசோதனையில் சாவுக்குகாரணம் தலையில் பாய்ந்த குண்டுதான் காரணம் என்று தெரியவந்துள்ளது,அவரின் உடலை இந்த பிரச்சினைகள் முடியும்வரை பாதுகாப்பாக வைத்து இருக்க உத்தரவு போட்டு இருக்கிறேன்" என்றான்

"அந்த உடலும் ஒருவிதத்தில் நமக்கு உதவலாம்"என்றது நிஷி

இருவரையும் புரியாமல் பார்த்துக்கொண்டு இருந்த புனிதாவிடம் "சரி கிளம்பு உன்னை வீட்டில் விட்டுவிட்டு செல்கிறேன்" என்றான்

"என்னோடு நிஷியையும் இருக்க சொல்லுங்களேன்".என்றாள்

"இதைபார்த்து கூட்டம் கூடி விட்டால்?" என்றான்

"இல்லை நான் பார்த்துகொள்கிறேன்..எனக்கு கொஞ்சம் ஆறுதலாக இருக்கும்" என்றாள்

"என்ன போகின்றாயா நிஷி?"

"அவள் என்னை கூட்டம் போட்டு காட்டாமல் இருந்தால் நான் போகிறேன்"

புனிதா அவள் வீட்டில் இறங்கும்போது நிஷியையும் துக்கிக்கொண்டாள்

"எங்கள் ஆட்கள் உங்கள் வீட்டை கண்காணிப்பார்கள்..நீ கவலை இல்லாமல் தூங்கு" என்றான்

"புனிதாவை நான் பார்த்துகொள்கிறேன் நீ அவளை நினைக்காமல் தூங்கு" என்றது நிஷி

இருவரும் பார்த்து சிரித்து கொண்டார்கள்

9

புனிதா வீட்டுக்குள் போகும்போது "புனி தா" என்றது நிஷி

முத்தம் கொடுத்தாள்

"புனி நீ இரவில் தனியாகத்தான் படுப்பியா?"

"ஆமாம் ஏன்?" என்றாள்

"இல்லை கேட்டேன்" என்றது நிஷி

சாப்பிட்டு துங்கும் வேளையில்.."நிஷி இப்பவாது உன்னை பற்றி சொல்லேன்" என்றாள்

"நான் ஒரு சாதாரண பேசத் தெரிந்த நாய் அவ்வளவுதான்..வேறென்ன தெரியவேண்டும் உனக்கு?"

"அதான் நீ எப்படி பேசுகின்றாய்? எப்படி புத்தகம் படிக்கின்றாய்? உனக்கு எப்படி இரண்டு மூளை?"

"சொல்லித்தான் ஆக வேண்டுமா?"

"ஆமாம் கண்டிப்பாக" என்றாள்

"நீங்கள் உங்கள் ஆய்வுகூடத்தில் உருவாக்கிய அந்த அழியா செல்கள் நீங்கள் நினைப்பது போல முதன்முதலாக உருவாக்கப்படவில்லை....ஏற்கனவே அந்த செல்களைவைத்து ஒரு உயிர் படைக்கபட்டுள்ளது..அது நான்தான்..என்னை இந்த முறையில் உருவாக்கியது பொற்கொடி எனும் வேற்றுகிரக பெண். அவள்தான் முதன்முதலில் இந்த மாதிரியான செல்களை உருவாக்கினாள்..அதில் தேவையான மாற்றங்களை செய்து என்னை பேச வைத்தாள்..செயற்கையான கண்கள், நினைவுப்பகுதி என எல்லாவற்றையும் பொறுத்த உதவி செய்தாள்..ஆனால் அவள் இப்போது இல்லை."என்றது நிஷி

"நிஷி நீ அழியா செல்களின் மூலம் உருவாக்கப்பட்டு இருக்கிறாயா?" என்றாள்

"ஆமாம் வேண்டுமானால் என் காதை கொஞ்சம் வெட்டி பார் கொஞ்ச நேரத்தில் தானாக வளரும்" என்றது

"வேண்டாம் வேறென்ன உனக்குள்?" என்றாள்

"ஒரு செயற்கையான கண்...அது செயற்கை நினைவுப்பகுதியுடன் இணைக்கபட்டு இருக்கும்...என்னால் அதன் மூலம் படிக்க, படம் பிடிக்க, அளக்க என எல்லா வேலைகளையும்

செய்ய முடியும்,இந்த செயற்கையான நினைவுப் பகுதியையும்,இயற்கையில் இருக்கும் மூளையையும் என்னால் சேர்த்து செயல்படுத்த முடியும். என்னை எதுதாக்கினாலும் எனக்கு ஒன்றும் ஆகாது.".என்றது

"அப்படி என்றால் உனக்கு எல்லாம் தெரியுமா என்ன?"

"இல்லை இதுவரை நான் படித்து தெரிந்துகொண்டது, எனது செயற்கை நினைவுப்பகுதியில் ஏற்றம் செய்யபப்ட்ட தகவல்களை தவிர எனக்கு ஒன்றும்தெரியாது. மற்றபடி நான் ஒரு சாதாரண நாய்தான்" என்றது.

இந்த முறை நிஷி கேட்காமலேயே முத்தம் கொடுத்தாள்

"அதிகம் கொடுக்காதே கணேஷ் அழுவான்"

"அவர் எதுக்கு அழவேண்டும்"

"நீ கொடுத்ததை அவனிடம் நான் சொல்லுவேன்"

"அவரைப் பற்றி கொஞ்சம் சொல்லேன் நிஷி" என்றாள்

"அவன் சோம்பேறி, என்னைவைத்து நல்ல பெயர் வாங்குகிறான். நான்குவருடமாக பெண்கள் பின்னாடி சுற்றி இதுவரை எந்த பெண்ணும் அவனுக்கு கிடைக்கவில்லைஎன்று என்னிடம் புலம்புவான்...நானே அவனுக்கு அந்த விசயத்தில் அறிவுரைவழங்கி இருக்கேன் என்றால் பாரேன்ன.." என்றது நிஷி

புனிதா மெல்ல சிரித்தாள்.

"இப்போது காதலுக்காக உன்னை சுற்றுகிறான்..கவனமாக இருந்துகொள" என்றது

"அப்படி சொல்லாதே அவர் நல்லவர் என மீது எவ்வளவு அக்கறை வைத்து இருக்கிறார்" என்றாள்

"இப்போது எனக்கு தெரிந்து விட்டது நீ அவனை பற்றி கேட்டது எதற்கு என்றுஉங்களின் ஹார்மொன்களின் சேட்டைகளுக்கு என மூளையை நான் ஏன் குழப்பி கொள்ளவேண்டும் என்னவோ செய்யுங்கள்" என்றது நிஷி

"அப்படியே இரு அதுதான் உனக்கும் நல்லது" என்றாள்

புனிதா நிம்மதியாக உறங்கினாள்..நிஷி உறங்காமல் அந்த சங்கேத எழுத்துக்கள் பற்றி யோசித்து கொண்டு இருந்தது.

10

மறுநாள் மாலையில் கணேஷ் வந்தான்

"புனிதா நீ வந்து உனக்கு ஆபத்து இருப்பதாக முறைப்படி ஒரு விண்ணப்பம்கொடுத்தால் உனது பாதுகாப்பை நீடிக்க எனக்கு உதவியாக இருக்கும்" என்றான்

போய்விட்டு திரும்பும்போது இருட்டியிருந்தது....நிஷி புனிதாவின் மடியில் உட்கார்ந்து இருந்தது...இவர்களின் வாகனத்தை முந்தி சென்ற ஒரு வாகனம் திடிரென்று வேகம் குறைந்து அதில் இருந்து துப்பாக்கி சுடும் சத்தம் கேட்க...அடுத்த நொடி கணேஷின் கார் கண்ணாடி உடைந்தது...குண்டுகள் தொடர்ந்து வர..கணேஷ் காரை நிறுத்திவிட்டு கீழே குனிந்தான்..புனிதாவோடு கீழே இருந்த நிஷி மெதுவாக நழுவி மேலே சென்று குண்டுகள் வரும் இடத்தை பார்த்தது..

ஒருவன் ஓட்டுனர் இருக்கையில் அமர்ந்து இருக்க மற்றொருவன் சுட்டு கொண்டு இருந்தான்..

"நிஷி கீழே வந்து தொலை சுட்டுவிடப்போகிறார்கள்" என்றாள்

அதை காதில் வாங்காமல் அந்த வாகனத்தையே பார்த்து கொண்டு இருந்தது..அதே நேரத்தில்..கணேஷ் தனது துப்பாக்கியுடன் மறைந்து கீழே இறங்கி அவர்களை நோக்கி சுட ஆரம்பித்தான்..

கணேஷ் சுட்டதால் அந்த வாகனம் கொஞ்சம் வேகமாக நகர..அதை துரத்திக்கொண்டே ஓடினான்..

கணேஷ் பின்னால் ஓடிவருவதை பார்த்த அவர்கள் நிறுத்தி அவனை குறிவைத்து சுட்டனர்..அதில் இருந்து தப்பிக்க சாலை ஓரத்தில் சரிவாக இருந்த பள்ளத்தில் குதித்தான்.

கணேஷை காணவில்லை என்றவுடன் அவர்கள் போய்விட்டார்கள்.மேலும் அதே நேரத்தில் அதே வழியில் மற்றொரு வாகனமும் வந்து கொண்டு இருந்தது..

"புனி நீ இங்கேயே இரு வெளியில் வராதே அவர்கள் திரும்பி வரலாம்" என்று சொல்லிவிட்டு நிஷி தாவி கணேஷ் கீழே விழுந்து கிடந்த பள்ளத்தை நோக்கி ஓடியது..விழுந்ததில் மயங்கி இருந்தான்...வேகமாக திரும்பி காருக்கு வந்த நிஷி "புனிதா" என்று அழைத்தது..

கதவை திறந்துகொண்டு வெளியில் வந்த புனிதா நிஷியை அணைத்து முத்தம் கொடுத்தாள்

"புரிஞ்சுப்போச்சு..அவசரத்தில் உன் பெயரை முழுசாக சொல்லிவிட்டேன்...கணேஷ் அங்கே மயங்கி கிடக்கிறான்..அந்த தண்ணீர் பாட்டிலை எடுத்துக்கொண்டு வா" என்று சொல்லி நிஷி

முன்னால் ஓடியது அதை பின்தொடர்ந்தாள்...

அவன் மயங்கி கிடந்ததை பார்த்தவுடன்..அவனை தன் மடியில் வைத்து முகத்தில் நீர் தெளித்தாள்..உணர்ச்சிகள் ஏதும் இல்லை..கொஞ்சம் பயந்தாள்

அதே நேரத்தில் நிஷி ஏதோ யோசித்து கொண்டு இருந்தது..

"நிஷி இவன் முழிக்க மாட்டேங்கிறான் எனக்கு பயமாக இருக்கு" என்றாள்

"அவனுக்கு ஒன்றும் இல்லை நீ மடியில் வைத்து இருக்கின்றாய் என்பதற்காக அவன் நடிக்கிறான்..அவனுக்கு சாதாரண மயக்கம்தான் என்றது" நிஷி.

இதை கேட்டவுடன் இயல்பாக கண்விழிப்பது போல கண்விழித்தான். புனிதா அவனை முறைத்தாள்.

"இந்த பிரச்சினை இத்தோடு முடிந்தது..அவர்கள் வந்த வண்டி எண்ணை சேமித்துவைத்து இருக்கிறேன் உடனே அடுத்து இருக்கும் காவல் நிலையத்துக்கு தகவல் சொல்லி அவர்களை பிடிக்க சொல் கணேஷ்" என்றது நிஷி

கணேஷ் வேகமாக சென்று தகவல் கொடுத்தான் வாகனம் எந்த வழியில் வருகின்றது போன்ற தகவல்களையும் சொன்னான்.

திரும்பும்போது "இந்த முயற்சி யாரை கொல்ல?" என்றாள்.

"வேறு யாரை உன்னைத்தான்.".என்றான் கணேஷ்

அவள் எதுவும் பேசவில்லை

"அதான் பிழைத்து விட்டாயே என்ன கவலை" என்றது நிஷி.

"இதை வீட்டில் யாரிடமும் சொல்லாதே" என்றான்

"சரி" என்று இறங்கி கொண்டாள்

திரும்பி வீடு வரும் போது அவனுக்கு அழைப்பு....அந்த வாகனம் பிடிக்கப்பட்டு இருப்பதாக...

## 11

வேகமாக அந்த காவல் நிலையத்திற்கு சென்றான்.அதே வாகனம் வெளியில் நின்று இருந்தது....சிறைக்குள் இரண்டு பேர் அடைத்து வைக்கப்பட்டு இருந்தனர்.

"ஏதாவது தகவல் சொன்னார்களா?" என்றான்

"இல்லை சொல்ல மறுக்கிறார்கள் எப்படியும் காலைக்குள் சொல்லவைத்து விடுவோம்" என்றார் அங்கு இருந்த அதிகாரி

"விவரம் சொன்னவுடன் என்னை தொடர்பு கொள்ளுங்கள்" என்று சொல்லிவிட்டு கிளம்பினான்

"என்ன குற்றத்தை ஒப்புகொண்டார்களா?" என்றது நிஷி

"இல்லை" என்றான்

"அவர்கள் புனிதாவை குறிவைத்தர்கள்..நாம் மாட்டிகொண்டோம்" என்றது நிஷி

"எல்லாம் நாளை காலையில் தெரியும்" என்றான்

அதற்குள் அந்த வாகனம் பற்றிய விவரம்.அந்த ஆட்களின் விவரம் பற்றி அறிந்த காவல்துறை அவர்கள் மூவரும் சந்திக்கும் இடத்தை கண்டுபிடித்து, அங்கு இருந்த அந்த செல்கள் அடங்கிய பெட்டியையும் கைப்பற்றியது.

மறுநாள் ஊடகங்களில் பிரபலமாக அந்த மூவரின் புகைப்படம் இருந்தது..கொலைக்கு காரணமாக.....அந்த அழியா செல்களின் மூலமாக உயிர் அழியாத ஒன்றை உருவாக்கினால் கடவுளின் கோட்பாட்டுக்கு பங்கம் வரும் என்பதால் ஒரு சிறு இயக்கத்தைசேர்ந்த அவர்கள் அந்த செல்களை கடத்தியதாகவும்,அப்போது பிரச்சினைஏற்பட்டதால் அந்த விஞ்ஞானியை கொல்ல நேர்ந்ததாகவும் அந்த மூவரும்ஒப்புகொண்டு இருந்தனர்.

## 12

அடுத்த நாள் அந்த பெட்டியை பாதுகாப்பாக திறக்கும் பொருட்டு ஆய்வுகூடத்திற்கு கொண்டுவரப்பட்டது.

முதல் வாய்ப்பு புனிதாவுக்கு கொடுக்கப்பட்டது...அவள் இந்த கொலை விவகாரம் ஒரு முடிவுக்கு வந்ததில் இருந்து கொஞ்சம் நிம்மதியாக ..இனிமேல் இந்த வேலையும்வேண்டாம் ஒன்னும் வேண்டாம் என்று முடிவெடுத்து இருந்தாள்..இதனால் அதன் முன்நின்று பார்த்துவிட்டு "எனக்கு எப்படி என்று தெரியாது..அந்த சங்கேத எழுத்துக்கள் கொஞ்சம் சிக்கலானவை" என்று சொல்லி விட்டு நகர்ந்தாள்

ஒருமுறை அந்த எழுத்துக்கள் பொதிந்து இருக்கும் செல்களை பற்றி அறிய முனைந்தது நிஷி..

"எல்லாம் கொஞ்சம் புரிகின்ற மாதிரி இருந்தாலும் அந்த எழுத்துக்கள் பொதிந்த செல்கள்

எங்கே என்பதுதான் இப்போது குழப்பம்" என்றது நிஷி

"ஒருவேளை இறுதியில் ஒட்டகசிவிங்கி படம் போட்டு இருப்பதால் அதன் செல்லை படித்தால் விடை கிடைக்குமா?" என்றான் கணேஷ்

"வாய்ப்பு இல்லை அதன் செல்களை படிப்பது தேவை இல்லாத விசயம் அதே நேரத்தில் இந்த படம் ஒன்றை உணர்த்துவதற்காக கொடுக்கப்பட்டு இருக்கின்றது..அதை கண்டுபிடிக்க வேண்டும்" என்றது நிஷி

நிஷி மெதுவாக அங்கு இருந்த மேசையில் உலாவியது...

"நிஷி ஏதாவது செய்" என்றான் கணேஷ்

அதை காதில் வாங்காமல் அது உலாவியது...

வேகமாக ஓடி வந்து "நான் உடனே அந்த சடலத்தை பார்க்கவேண்டும்" என்றது நிஷி

"முதலில் என்னை அங்கு அழைத்து போ நான் அப்புறம் சொல்கிறேன்" என்றது

“எதற்கு?”

"புனி சில செல்களை பிரித்து எடுக்க தேவையான உபகரணங்களை எடுத்துகொண்டு நீயும் எங்களோடு வா" என்று நிஷி சொல்ல கிளம்பினார்கள்

"எதுக்கு நிஷி இப்போ அந்த சடலம்" என்றான் கணேஷ்

"அதில்தான் அந்த சங்கேத மொழி இருக்கும் செல்கள் இருக்கின்றன"

"எப்படி உறுதியாக சொல்கின்றாய்?"

"அந்த ஒட்டக சிவிங்கியின் படம் அதைத்தான் உணர்த்துகின்றது"

"எப்படி?" என்றான்

"bio mimicry என்ற ஒரு சமாச்சாரம் இருக்கிறது..அதாவது இயற்கையில் உள்ளவற்றை பார்த்து மனிதன் தனது அறிவால் தனது தேவை, முன்னேற்றத்துக்காக அதைபோல செயற்கையாக உருவாக்கிகொள்வது..இந்த முறையில் மனிதன் சிலவற்றை உருவாக்கி மிகுந்த பயனும் பெற்று இருக்கிறான்" என்றது நிஷி

"நீ சொல்ல வருவது பறவையை கண்டான் விமானம் படைத்தான் என்ற பாடலின் அர்த்தத்தையா?" என்றான்

"ஆமாம் அதே விசயம்தான் தமிழ் மக்கள் கொடுத்து வைத்தவர்கள் எல்லாமே ஏற்கனவே உங்கள் முன்னோர்களால் சொல்லப்பட்டு இருக்கின்றது..." என்றது நிஷி

"சரி இவர் என்ன அந்த முறையில் செய்து இருக்கிறார் இந்த செல்களின் விசயத்தில்?" என்றான்

"அதை போல ஒரு எளிய முறையை முயன்று இருக்கிறார்..ஒட்டகச்சிவிங்கி என்றதும் நினைவுக்கு வருவது அதன் கழுத்துதான்..அவர் அந்த எழுத்துக்களை அமைத்த செல்களை அவரது கழுத்தில் எங்காவது பொதித்து வைத்து இருப்பதைத்தான் குறிப்பால் உணர்த்தி இருக்கின்றார்" என்றது நிஷி.

"சரி அப்படியே அந்த செல்கள் கிடைத்தாலும் அதில் பெட்டியை திறக்க உதவும் எழுத்துக்கள் எப்படி கண்டுபிடிப்பது?" என்றான்

"அது புனிதாவுக்கு தெரியும்" என்றது நிஷி

"புனிதா நீ இவ்வளவு அறிவாளி என்று நான் நினைக்கவில்லை" என்றான்

"இதில் அறிவாளி என்பதுக்கு இடமில்லை இதே விசயத்தை ஒருவர் ஏற்க்கனவே செய்து இருக்கிறார்...venter என்பவர் தான் உருவாக்கிய செயற்கை genome ல் சில வார்த்தைகளை இந்த முறையில் எழுதி இருக்கிறார்..அதாவது செல்லில் இருக்கும் DNA உள்ள ATCG என்ற நியூக்ளியோடைடுகள் இணைந்தால் ஒருவித அமினோ அமிலங்களைஉருவாக்கும்.அந்த அமினோ அமிலங்களின் பெயரில்தான் அவர் சொல்ல வரும் வார்த்தைகளை சொல்லி இருப்பார்...நமது வார்த்தைகளை சொல்ல தேவையான அமினோ அமிலங்களுக்கு ஏற்ப அந்த நியூக்ளியோடைடுகளை செயற்கையாக தேவையான படி மாற்றியமைக்க வேண்டும்..அவ்வளவுதான் எனவே இதே முறையை பயன்படுத்தி இந்த எழுத்துக்களை கண்டு பிடிப்பது கஷ்டமில்லை" என்றாள்

13

அந்த சடலத்தின் கழுத்தை பார்த்தார்கள் முன்புறத்தில் ஒரு இடத்தில மட்டும் கொஞ்சம் நிறம் மாறியிருந்தது .

"நல்லவேளை பிரேத பரிசோதனையின் போது "Y" வெட்டு கொஞ்சம் நீளமாக வெட்டி இருந்தால் இதுவும் கூட சேர்ந்து போய் இருக்கும்...புனி அந்த இடத்தில உள்ளசெல்களோடு சேர்த்து அவரது உடம்பின் சில செல்களையும் எடுத்துகொள் குழப்பம்வந்தால் இரண்டையும் பிரித்து அறிந்து கொள்ளலாம்" என்றது நிஷி

முதலில் அவருடைய செல்களை சோதனை செய்து குறிப்பு எடுத்தாள்...பின்னர் அந்தநிறம் மாறிய இடத்தில இருந்து எடுத்த செல்களை சோதித்தாள்...அதில் இருந்து அந்த செல்களின்

உள் அமைப்பு செயற்கையான முறையில் வடிவமைக்கப்பட்டு அதான்வளர்ர்ச்சி தடை செய்யப்பட்டு இருந்தது...அதாவது இந்த எழுத்துக்களைகுறிப்பிட மட்டுமே அந்த செல்கள்........அதில் உள்ள DNA வின் இணைப்பை ஆராயும்போது அவளுக்கு புரிந்தது..அதை இணைத்து இருக்கும் ATCG என்ற எழுத்துக்கள் எல்லாமே ஒரே கோர்வையாக இருந்ததன...

**TCTTCC TCGCCT CCCTCG CCGCCA TCGTCC TCTTCC TCGCCT**

புனிதா இந்த எழுத்துக்களை நிஷியிடம் கொடுத்தாள்

நிஷி அதை ஒருமுறை பார்த்துவிட்டு....இந்த மாதிரி இணைந்து இருந்தால் அதில்இருந்து வெளிப்படும் அமினோ அமிலங்களின் பெயர்களை வரிசையாக சொல்லஆரம்பித்தது..அதை புனிதா எழுதினால்

Arginine,Glycine,Serine,Arginine,Arginine Serine Arginine Glycine Glycine Serine Glycine Glycine Serine Arginine...

இதை எழுதிய புனிதா கொஞ்சம் குழம்பினால்..அவள் எதிர்பார்த்தது.. ஒருவார்த்தை..ஆனால் இதில் இருப்பது அதிகமான அமினோ அமிலங்களின் பெயர் இதில்இருந்து எப்படி பெயரை கண்டு பிடிப்பது ???

"எப்படி நிஷி இதில் இருந்து கண்டுபிடிக்க?" என்றாள்

"இதில் ஒரே மாதிரி பெயர் கொண்ட அமிலங்களை சரியாக பிரித்து எழுது" என்றது

எழுதினாள்......

**Arginine Glycine Serine**
**Arginine Glycine Serine**
**Arginine Glycine Serine**
**Arginine Glycine Serine**
**Arginine Glycine ?**

நிஷி ஒரு முறை அந்த வரிசைபடுத்திய வார்த்தைகளை பார்த்தது..

அந்த சந்தேக எழுத்து "Serine" என்றது,

"எப்படி இவ்வளவு உறுதியாக சொல்கின்றாய்,அதில் ஒன்று விடுபட்டு இருப்பதினால் அந்த முடிவுக்கு வந்தியா?" என்ன என்றாள்

"இல்லை நான் சில நாட்களுக்கு முன்னர் மனிதன் எந்த மாதிரியெல்லாம் சங்கேத வார்த்தைகளை அமைப்பான் என்ற சம்பந்தமான புத்தகம் படித்தேன்..அதன்படிஇதுதான் சரி நீ முயற்சி செய்து பார்" என்றது நிஷி

அருகில் இருந்த கணேஷ் "வேகமாக அதை திறந்து இந்த விசயத்தை இப்பவே முடித்துவிட்டு போகலாம்" என்றான்

"எங்கே போக?" என்றாள்

"உன் வீட்டுக்கு"

"எதுக்கு?"என்றாள்

"உன் பெற்றோரிடம் என் கல்யாண விசயமாக பேசவேண்டும்."

புனிதா கொஞ்சம் ஆச்சரியமாகி பின் சிரித்தாள்

"உங்களின் காதலுக்கு இதுவா நேரம் வேகமாக திறந்து அந்த செல்கள் வளர்ச்சி அடைந்து இருக்கின்றதா என்று பாருங்கள்..அதுதான் எனக்கு முக்கியம் என்னைபோலவே ஒரு உயிர் பற்றி எனக்கு ஆர்வம அதிகம்" என்றது

"இதுதான் புனிதா நீ செய்யும் கடைசி வேலை இந்த ஆய்வுகூடத்தில் அதற்கு பிறகு நீ இங்கு வேலை செய்து மீண்டும் இந்த மாதிரி பிரச்சினையில் மாட்ட வேண்டாம்"என்றான்

"சரி சரி நீ அவளை வீட்டில் பூட்டி வைத்துகொள் இப்போது அதை திறக்க சொல்" என்றது நிஷி

அந்த எழுத்துக்களை அங்கு இருந்த திரையில் அழுத்தினாள்.

சிறு சத்தத்துடன் அந்த பெட்டி திறந்தது, உள்ளே ஒரு சிறிய கண்ணாடி கிண்ணம் ஒன்றில் ஒரு திரவம் போன்று இருந்தது..

"அதை உடனடியாக சோதித்து பார் ஏதும் செல்களில் வளர்ச்சி இருக்கின்றதா?" என்றது நிஷி ஆர்வமாக

அதை எடுத்து கொண்டு போய் நுண்நோக்கியில் பார்த்தாள்

"என்ன வளர்ந்து இருக்கா?" என்றது நிஷி

"இல்லை"!!!

**(முற்றும்)**